# *Tamiḻaracu*
## *Malar 1, itaḻ 10/11*
## *July / September 1924*

Record no. 1022

ஸ்ரீ

# தமிழரசு

(*)

## வணக்கம்.

### அங்கயற்கண்ணம்மை.

"பொங்குருச் செல்வங் கல்வி பொருவிலா வாய்மை தூய்மை
இங்கெமக் கருள வல்ல வினையிலா வெம்பி ராட்டி
பங்கயத் தடஞ்சூழ் கூடற் பவளமால் வரையை நீங்கா
அங்கயற் கண்ணி மங்கை யடிக்கம லங்கள் போற்றி."

பெரும்பற்றப்புலியூர் நம்பி.

மலர்-க. { இரத்தாக்ஷி ஹு ஆடி ஆவணிமீ / 1924-ஹு ஜூலை, ஆகஸ்டு, செப்டம்பர்மீ } இதழ் ம-மக

## சோழன் கரிகாலனும், கோச்செங்கணானும்.

மேலே குறிக்கப்பட்ட இருவரும் சோழநாட்டையாண்ட சோழவரசர்கள் என்பது தெளிவாம். இவ்விருவருடைய சரிதங்களையும் பண்டைத்தமிழ் நூல்களும் பிற்பட்ட தமிழ் நூல்களும் நன்கு விளக்கியிருக்கின்றன. முதலிற்கூறிய கரிகாலன், சிலப்பதிகாரம், மணிமேகலை, பொருநராற்றுப்படை, பட்டினப்பாலை, புறநானூறு, பழமொழி முதலிய நூல்களில் குறிக்கப்பட்டுள்ளான். மேலே கூறிய நூல்களிலிருந்து அவனது சரிதத்தை ஒருவாறு அறிந்துகொள்ளலாம். அதாவது:— "இக்கரிகால் வளவன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியின் புதல்வன்; இவன் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து அரசு செய்தவன்; தம்முள் மாறுபட்டு வந்து தன்னை இளையனென்றிகழ்ந்த முதியோர் பொருட்டுத் தான் முதியனாய் வந்து அவர்கள் வழக்கைத் தீர்த்தவன்; இளமையில் நெருப்பாற் சுடப்பட்டு உயிர் உய்ந்தவன்; இரும்பிடர்த்தலையார் என்னும்

புலவரை அம்மானாகவும் அமைச்சராகவும் பெற்றவன்; இவன் புலவர் பாடும் புகழுடையோன்; பொருநாற்றுப்படை, பட்டினப் பாலை என்னும் பாட்டுக்களுக்குத் தலைவன்; இவன் வடநாட்டரசரையும் தென்னாட்டரசரையும் போரில் வென்று வீரத்தை நிலைநாட்டினவன்" என்பனவும் இவைபோன்ற பிறவுமாம்.

இனிப் பின்னர்க் கூறப்பட்ட சோழன் செங்கணான், நாயன்மார் அறுபத்துமூவரில் ஒருவராகக் கூறப்பட்ட கோச்செங்கட் சோழநாயனாராம். கோச்செங்கட் சோழர் சரிதம் பெரிய புராணத்தில் "காவிரிமருங்கு சந்திரதீர்த்தக்கரையில் வெண்ணாவல் மரத்தின் கீழிருந்த சிவலிங்கத்தை ஒரு வெள்ளானை நாளும் வழிபட்டு வந்தது. அவ்விடத்திலேயே ஒரு சிலம்பி பூர்வஜன்ம வாசனையால் அச்சிவலிங்கத்தை வழிபடக்கருதி அவ்விலிங்கத்தின் முடிமேல் இலைச்சருகுகள் உதிராவண்ணம் தன் வாய்நூலால் பந்தலமைத்து வந்தது. அதனை யானை மறுநாள் வந்து கண்டு அந்நூல் எச்சிலாதலின் அசுத்தமென்று கருதி அதனைச் சிதைத்தது. சிலம்பி மறுநாளும் அவ்வண்ணமே செய்ய மறுபடியும் யானை யதனைச் சிதைத்தது. இங்ஙனம் பலகால் நிகழ அதனால் ஒன்றிற்கொன்று மாறுபாடுண்டாகச் சிலம்பி யானையிடத்துச் சீற்றங்கொண்டு யானையின் துதிக்கையிற் புகுந்து கடிக்க யானைக்கு நோவுண்டாகித் தன் துதிக்கையைக் கீழறைந்து உயிர் துறந்தது. கையில் புக்க சிலம்பியும் அறைதாங்காமல் உயிர் நீத்தது. அச்சிலம்பியே மறுபிறப்பில் சோழர் குலத்தில் செங்கோற்சோழனாகிய சுபதேவன் என்னும் அரசனுடைய மனைவி கமலவதியின் கருப்பத்தில் வந்தடைந்தது. கமலவதி பத்து மாதமுங் கழித்து மகவை ஈனும் பருவத்தில் காலமுணர் பெரியோர்கள் 'இம்மகவு இன்னும் ஒருகன்னல் கழித்துப் பிறப்பின் இவ்வுலக முழுவதையும் ஒரு குடை நீழலின்கண் ஆளும் ஆண் மகவாகப் பிறக்கும்' எனறனர். அதனைக்கேட்ட கமலவதி அங்ஙனமே இக்குழவி இன்னுமொரு கடிகை கழித்துப் பிறக்கும் வண்ணம் என் கால்களை உயரத்தூக்கிக் கட்டுங்கள் என்றுகூற ஏவல்செய் மகளிரும் அங்ஙனமே செய்தனர். பின்னர் அப்பெரியோர் கூறிய நன் முகூர்த்தம் வந்தவுடன் கால்களை யவிழ்த்துவிட ஆண்மகவு ஒன்று இளஞ்ஞாயி



னைப் போலுதயம் செய்தது. அதனைக் கமலவதி வாரியெடுத்துச் சிறிது காலம் கருப்பத்தில் தாழ்த்திருந்தமையால் அதன் கண்கள் சிவந்திருந்தது பற்றி என் "கோச் செங்கணானோ" என்று ஆதரவுடன் கூறிஇறந்தனள். அக்குழந்தை தன் தாயாரால் அழைக்கப்பெற்ற கோச்செங்கணான் என்பதையே பெயராகக்கொண்டு வளர்ந்தது. அக்குழந்தையே கோச்செங்கட்சோழ நாயனார் என்னும சைவ அடியாராகும். அக்கோச்செங்கட்சோழ நாயனார் பல சிவாலயங்கள் செய்து இவ்வுலகம் ஆண்டிருந்தார் என்று இவ்வளவே கூறப்பட்டுள்ளது.

இனி இவ்விருவரையும் பற்றிக் கூறியவற்றை ஆராய்வாம். கரிகாலன் என்னும் பெயருள்ள அரசர் பலரிருந்ததாகவும் அவருள் பொருநாற்றுப் படையுள் கூறப்பட்டுள்ள கரிகாலன் வேறு, பட்டினப்பாலையுட் கூறப்பட்ட கரிகாலன் வேறு என்று சிலர்கருதுவர். கரிகாலன் என்னும் பெயருள்ள அரசர் எத்துணையராயினும் ஆகுக. நமக்கு அவற்றைப்பற்றி யாராய்ச்சியின்று. பின்னர்ப் பொருநாற்றுப் படையுட் கூறப்பட்டவனும் பட்டினப்பாலையுட் கூறப்பட்டவனும் ஆகிய கரிகாலன் என்னும் பெயருள்ளவர் இருவரும் ஒருவனே என்பதும் அக்கரிகாலனோடு வேறுபட உணரப்பட்ட சோழன் செங்கணான் அக்கரிகாலனில் வேறல்லன் என்பதுமே இங்கே ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட விஷயமாம்.

பொருநாற்றுப் படையுள் "தாய்வயிற்றிருந்து தாயம் எய்திப் பிறந்து" என்று கூறியுள்ளார். அவ்வடிகட்கு நச்சினார்க்கினியர் "தான் பிறக்கின்ற காலத்துப் பிறவாதே நல்ல முகூர்த்தம் வருமளவும் தாயுடைய வயிற்றிலே யிருந்து பிறக்கையினாலே அரசவுரிமையைப் பெற்றுப்பிறந்து" என்று கூறியுள்ளதை நோக்குங்கால் கோச்செங்கணானுக்குப் பெரிய புராணத்தில் கூறப்பெற்ற சரிதமாக இருக்கின்றது. ஆகவே கரிகாலன், கோச்செங்கணான் ஆகிய இருவர் பிறப்பும் ஒருதன்மையனவேயாம். பட்டினப்பாலையுள் "செங்கண்ணால் செயிர்த்து நோக்கி" என்று கரிகாலனைக் கூறுவதால், பட்டினப்பாலைத் தலைவனும், பொருநாற்றுப் படைத்தலைவனும் ஒருவனே என்று கருதப்படுவதுடன் அவன் கோச்செங்கணானின் வேறல்லன் என்று கருதவும் இடந்தருகின்றது.

கோச்செங்கணான், பரமசிவனுக்குப் பல கோவில்கள் இயற்றியருளினான் என்று பெரிய புராணம் முதலிய நூல்கள் கூறும், அதனைத் திருமங்கை மன்னன் "இருக்கிலங்கு திருமொழிவாயெண்டோளீசற்கு எழின்மாடமெழுபதுசெய் துலகமாண்ட திருக்குலத்து வளச்சோழன்'' என்று மிகவும் அழகாகக் கூறியிருக்கின்றார். அவர் கோச்செங்கணான் பரமசிவனுக்குக் கோவில்கள் எழுபது செய்தவன் என்று விவரித்திருக்கின்றார். இக்கோச்செங்கணான் எண்டோளீசற்கு எழின்மாடம் செய்த செய்கை கரிகாலனிடத்திலும் இருப்பதைக் காட்டுவாம். பட்டினப்பாலையுள் "கோயிலொடு குடிநிறீஇ'' என்று இருப்பதால் கரிகாலன் கோயில் பல சமைத்து அவ்விடத்து ஜனங்களைக் குடியேற்றினான் என்றுமறியக்கிடக்கின்றது. (கோச்செங்கணான் இயற்றிய கோயில்களில் சுவாமி எழுந்தளியிருக்கும் கர்ப்பக்கிரஹங்களில் யானை உள்நுழைய முடியாதபடி அதன்வாயில்கள் அவ்வளவு சிறியனவாக வகுக்கப்பட்டிருக்கின்றன என்பது சிலாசாதன பரிசோதகர்களின் அபிப்பிராயமாகும்.) அதன்படி செங்கணான் முன்பிறப்பில் சிலம்பியாயிருக்கும்போது தான் ஈசுவரனை வழிபடுவதற்கு யானை இடையூறாயிருந்தது என்று வர்மம் கொண்டு இப்பொழுது தான் வகுக்கும் கோயில்களில் இலிங்கமிருக்குமிடத்தில் யானை நுழையக்கூடாது என்ற கருத்துக்கொண்டே அங்ஙனம் கோயில்களை வகுத்தனனாம். முன்பிறப்பில் தான் இலிங்கத்தை வழிபடுவதற்குக் காலனாக இருந்தயானைக்கு இப்பிறப்பில் தான் காலனாக இருந்து யானைநுழையாதபடி கோயில்சமைத்தமையால் "கரிகாலன்'' என்ற சிறப்புப்பெயர் பெற்றனன் என்று கூறலாம். எனவே சோழன் ஒருவனுக்குச் செங்கணான் என்பதும் கரிகாலன் என்பதும் அவனுடைய வாழ்நாட் சரிதத்தில் சிறந்த நிகழ்ச்சிகளைக் குறிக்கக் கூடிய பெயர்களாக விளங்குகின்றனவேயன்றி அப்பெயர்களைத் தனித்தனியாகவுடைய சோழவரசர் இருவரல்லர் என்று தோன்றுகின்றது.

இவ்விரண்டு பெயர்களையுமுடைய சோழன் ஒருவனே என்பதை அவனுக்கு மற்றொரு பெயராயமைந்துள்ள திருமாவளவன் என்பது நன்றாக விளக்கும். கரிகாலனுக்குத் திருமாவளவன் என்னும் பெயருண்மையை "அரிமாவன்ன அணங்குடைத்துப் பின், திருமாவளவன்" என்று பட்டினப்பாலையடிகளாலும் "அரிமா சுமந்தவமளி



மேலானைத், திருமா வளவனெனத் தேறேன்" என்று பொருநாற்றுப்படையின் பின்னருள்ள வெண்பாவாலும் அறியலாம். அங்ஙனமே செங்கணானுக்கும் அப்பெயர் உண்டு என்பதை மங்கையர்கோன் தமது திருமொழியில் "திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்த கோயில் திருநறையூர்" என்று நறையூர்ப் பதிகத்தில் கோச்செங்கணானைக் கூறியிருப்பதால் அறியலாம். மேலெடுத்துக்காட்டிய திருமங்கையாழ்வார் வாக்கு திருமாவளவன் என்னும் பெயர்ப்பொருளையும் விளக்கி நிற்கின்றது. அதாவது:—திருக்குலத்தில் அவதரித்த வளம்பொருந்திய சோழநாட்டிற்குத் தலைவன் என்பது பொருளாம். திருமாவளவன் என்பதைத் திருக்குலத்து வளச்சோழன் என்று செங்கணானாகிய கரிகாலனுக்குப் பரகாலன் கூறியிருக்கின்றார். சோழர்களுள் திருக்குலம் என்று ஒருகுலம் இருந்தது போலும். அச்சோழனையே அவர் மற்றொரு பாசுரத்திலும் "குலச்சோழன்" என்றும் பாராட்டுகிறார். மேற்கூறியவதனால் திருமாவளவன் என்னும் சோழன், செங்கணான் என்றும் கரிகாலன் என்றும் பல பெயர்களால் அழைக்கப்பட்டு வந்தனன் என்பது விசதமாம்.

அன்றியும் பொருநாற்றுப்படை ஈற்றுவெண்பாக்களில் ஒன்று,

"முச்சக் கரமு மளப்பதற்கு நீட்டியகால்
இச்சக் கரமே யளந்ததால்—செய்ச்செய்
அரிகான்மேற் றேன்றொடுக்கு மாய்புனனீர் நாடன்
கரிகாலன் கானெருப் புற்று."

என்று கரிகாலனைத் திருமாலோடுவமித்து அவன் திரிவிக்கிரமாவதாரத்தில் மூன்றுலகத்தையும் காலாலளந்த செய்தியைக் கரிகாலனிடத்தில் ஆரோபிக்க வந்தபொழுது திருமாலோடிவனிடை வேற்றுமை தோன்றத் திருமால் முச்சக்கரத்தையும் (மூவுலகையும்) அளந்தான். இவன் கால் நெருப்புற்ற காரணத்தால் இச்சக்கரத்தை (இவ்வுலகை) மாத்திரம் அளந்தான். கால் நெருப்புறுதிருக்குமாயின் முச்சக்கரமுமளப்பதுஇவனுக்குஅரிதன்று என்று சிறப்பித்துக் கூறுகின்றது. இதனால் இவன் பலவரசர்களைப் போரில் வென்று இவ்வுலக முழுவதையும் தன்னடிப்படுத்து ஆண்டவன் என்பது விளங்குகின்றது. இவ்விஷயத்தையே பட்டினப்பாலை, சிலப்பதிகாரம் முதலிய நூல்க

ளும் வற்புறுத்தாநிற்கும். கரிகாலனுக்கு இச்செய்யுளிற் கூறிய விஷயத்தையே பெரும்பாலும் தழுவி அருண்மாரி தமது நறையூர்ப் பாசுரத்தில் கோச்செங்கணானுக்குக் கூறியிருப்பதை இங்குக் காட்டுவாம். அது:—

"அன்றுலக மூன்றினையு மளந்து வேறோர்
அரியுருவா யிரணியன தாகங் கீண்டு
வென்றவனை விண்ணுலகில் செலவுய்த் தாற்கு
விருந்தாவீர் மேலெழுந்து விலங்கல் பாய்ந்து
பொன்சிதறி மணிகொணர்ந்து கரைமேற் சிந்திப்
புலம்பரந்து நிலம்பரக்கும் பொன்னி நாடன்
தென்தமிழன் வடபுலக்கோன் சோழன் சேர்ந்த
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே." என்பதாம்.

மேற்குறித்த பாசுரத்தில்முன்னர்க்கூறிய கருத்தே தோன்றக்கூறியருளினார் என்பதைப் பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அதன்வியாக்கியானத்தில் "அவன் (திருமால்) பூமியைப்படையவளந்துகொண்டதோடு இவன் (கோச்செங்கணான்) பூமியையடையத் தானொருக்கியாண்டதோடு வாசியற உத்தேச்யமாயிருக்கிறது காணுமிவர்க்கு" என்று அருளிச்செய்துள்ளது. கரிகாலனுக்குக்கூறிய "முச்சக்கரமும்" என்னும் செய்யுளின் பொருளைத்தழுவி நிற்பதால் பொய்மொழி யொன்றில்லாத மெய்ம்மையாளன் ஆகிய கலிகன்றியும் அவருக்குப் பிற்பட்ட பெரியாரும் கோச்செங்கணானையே கரிகாலனாகக் கருதியிருக்கின்றனர் என்று தெளிவாகின்றது.

அன்றியும் கரிகாலன் போர்த்திறம் பொருநாற்றுப் படையில்,

"ஆளிநன் மானணங்குடைக்குருளை
மீளிமொய்ம்பின்மிகுவலிசெருக்கி
முலைக்கோள்விடாஅமாத்திரைஞெரேரென
தலைக்கோள்வேட்டங்களிறட்டாஅங்கு
இரும்பனம்போந்தைத்தோடுங்கருஞ்சினை
அரவாய்வேம்பினங்குழைத்தெரியலும்
ஓங்கிருஞ்சென்னிமேம்படமிலைந்த



இருபெருவேந்தருமொருகளத்தவிய
வெண்ணிற்றாக்கியவெருவருநோன்றாள்
கண்ணார்கண்ணிக்கரிகால்வளவன்"

என்று அக்கரிகாலன் சோழநாட்டு வெண்ணி என்னுமூரில் சேரன் பாண்டியன் என்னும் இருபேரரசையும் போரில் வென்று வெற்றிமாலை சூடினனாகக் கூறப்பட்டுள்ளது.

புறநானூற்றிலும் வெண்ணிப்பறந்தலை என்னுமிடத்தில் பெருஞ்சேரலாதனோடு பொருதனன் என்று கழாத்தலையார் வெண்ணிக்குயத்தியார் முதலியவர்கள் கூறுகின்றனர். அவ்வெண்ணிப் போரையே திருமங்கை மன்னன் "கவ்வைமா களிறுந்தி வெண்ணியேற்ற கழன்மன்னர் மணிமுடிமேற் காகமேறத், தெய்வவாள் வலங்கொண்ட சோழன்" என்றும் "வெங்கண்மா களிறுந்தி வெண்ணியேற்ற விறன்மன்னர் திறலழிய வெம்மா வுய்த்த, செங்கணான் கோச்சோழன்" என்றும் கோச்செங்கணானுக்குக் கூறியருள்கின்றார்.

இன்னும் கரிகால்வளவன் இருங்கோவேள் என்னும் வேள்குலத்தரசனோடு போருடற்றியதாகப் பட்டினப்பாலையுள் "இருங்கோவேள் மருங்குசாய" என்று குறிப்பிட்டிருக்கிறது. அதனையே ஆழ்வாரும் "மின்னாடு வேலேந்து விளைந்தவேளை விண்ணேறத் தனிவேலுய்த் துலக மாண்ட, தென்னாடன் குடகொங்கன் சோழன்" என்று கூறுகின்றார். இங்கே குறிக்கப்பட்ட விளைந்தவேள் என்பவனே இருங்கோ வேளாம்.

இன்னும் "வடவர் வாடக் குடவர் கூம்பத், தென்னவன் திறல்கெடச் சீறி" என்று பட்டினப்பாலை யடிகளில் காரிகாலனுக்குக் குறிப்பிட்டதை ஆழ்வார் "தென்தமிழன் வடபுலக்கோன்" என்றும் "தென்னாடன் குடகொங்கன்" என்றும் செங்கணானுக்குக் குறிப்பிட்டருள்கின்றார். இதனையே "தென்னவனா யுலகாண்ட செங்கணான்" என்று சுந்தரமூர்த்திகளும் கூறியுள்ளார். இவற்றாலெல்லாம், சோழனொருவன் வெண்ணி என்னுமிடத்துத் தமிழ்நாட்டு மற்றையிரு வேந்தரையும் போரில்வென்றனன் எனவும், வேளிர்

குலத் * தலைவனோடு போருடற்றினன் எனவும் தென்னாடு, வடநாடு, குடநாடு முதலிய நாடுகளை வென்றனன் எனவும் தெரிந்து கொள்ளலாம். மேலே கூறிய செய்கையைப் பட்டினப்பாலை முதலிய பாடல்கள் கரிகாலனுக்கும், திருமங்கையாழ்வார், கோச்செங்கணானுக்கும் கூறுவதால் அவ்விருவரும் தனித்தனி வேறாகாமல் ஒருவரேயாம் என்று தெளிவாகின்றது.

இக்காரணங்களைக் கொண்டு ஆராயுங்கால் கரிகாலனை கோச்செங்கணான் என்று கருதவேண்டி வருகின்றது. அதனை அறிவுடைய பெரியோர் ஆராய்ந்து தெளிவிப்பாராக.

பத்திராசிரியர்.

---

# தனிப்பாடற்றிரட்டு.

(306-ம் பக்கத்தொடர்ச்சி.)

---

ஒருசமயம் உள்ளூரில் (வேம்பத்தூரில்) உள்ள மஹாஜனங்கள் மழை பெய்யும்படி பாடவேண்டுமெனப் பாடியகவி.

வெண்பா.

மாலைமுடித் தென்னவன்பால் வாய்மை தவிரேனென்
றோலை விடுத்த துணர்ந்திலையோ—வேலை
பருகிமுகி லார்ந்துவரும் பண்ணவதென் னாடும்
பெருகமழை பெய்யவிப் பி.

மற்றோர்சமயம் பாற்கரசேதுபதி மஹாராஜா அவர்களது திருக்கரம் வெள்ளிமலையையும், மேருமலையையும் ஈயாமலிருந்தமை சிவசொத்தெனக்கருதி விட்டுவிட்டதுபோலுமென்று கொடைப் பெருமையைப்பற்றிப் பாடிய கவி.

வெண்பா.

சந்ததமுங் கீர்த்திமிகச் சார்பாற் கரன்செங்கை
செந்தமிழ்க் குவந்து செலவளிக்குங்—கந்தனப்பன்
நத்துவில்லு மில்லுமிந்த நாட்டி லுள்ளோர் போற்றுசிவ
சொத்தெனலான் விட்டுவிட்ட து.



மாட்சிபொருந்திய பாற்கரஸேதுபதி மஹாராஜா அவர்களோடு திருச்செந்தூர்க்குப் போயிருந்த காலத்திலவ்வூர்ச் சுவாமிநாதனைத் தரிசிக்கும்பொழுது எலுமிச்சம் பழத்திற்கும் முருகனுக்குஞ் சிலேடை பாடுமெனப் பாடியகவி.

வெண்பா.

வித்தை யுறலான் மிகுபலத்தின் மேலாகி
நத்துமங்கை யின்பாலி னண்ணுகையாற்—றுத்தியஞ்சேர்
பாற்கர ஸேது பதிநாட்டின் வேலவனை
யேற்குமெலு மிச்சையென்ப தே.

ஷேடியூர் மஹாஜனங்கள் தமக்கு இலைவிபூதிப் பிரசாதங் கொடுத்த காலத்திற் பாடியகவி.

வெண்பா.

செந்திற் பதியைத் திருசுதந்த ராளன்பைப்
பந்துமுலை வள்ளியம்மை பங்கனைநற்—சந்தனத்தை
வித்தை யளிக்குமிலை வீபூதி யைய்யுறங்கு
நித்திரையி லும்மறவே னே.

ஸேது சமஸ்தானத்திலுள்ள பணியாளர்கள் ஸேதுபதி மகாராஜாவை வணங்கினாலென்னபலன் கிடைக்குமென்று கேட்கப் பாடிய கவி.

வெண்பா.

பாபம்போந் தாபம்போம் பன்னாண் முனிவரிட்ட
சாபம்போந் தன்மந் தழைக்குமே—சோபைமிகு
பாவலர்சொல் ஸேது பதியாகும் பாற்கரனுங்
காவலவ னைத்தொழுதக் கால்.

பாற்கர ஸேதுபதி மஹாராஜா அவர்கள் செய்துள்ள புண்ணியச் சிறப்பைப்பற்றிப் பாடிய கவி.

வெண்பா.

வானத்து மீனை வருவாரி நுண்மணலைத்
தானத் திருந்தளப்பார் தம்மையொக்கு—ஞானத்திற்
றிண்ணியனும் பாற்கரமால் சிந்தைமகிழ் வாய்ப்புரியும்
புண்ணியத்தை யெண்ணப் புகில்.

பாற்கர ஸேதுபதி மஹாராஜா அவர்கள் சிதம்பரத்தில்
ஸ்ரீ நடராஜ மூர்த்திக்கு நெற்றியிற் பச்சைப் பதக்கமணிந்த
காலத்திற் பாடிய கவி.

கட்டளைக்கலித்துறை.

எச்சத் தியுமின்றி யேநட ராஜ னெழிற்சபையி
னுச்சத் திருக்குங்கந் கைச்சக் களத்தியை யுன்னியுன்னி
முச்சத்தி கூடி வெலப்புகு மாறென முன்குளத்திற்
பச்சைப் பதக்கமிட் டான்பாற்க ரேந்திர பாண்டியனே.

ஓர்சமயம் சேதுபதி மஹாராஜா அவர்களிடம் ஏழை மறையவன் தனக்குக் கல்யாணஞ் செய்துகொள்வதற்குப் பணவுதவி செய்ய வேண்டுமெனக் கேட்டபொழுது மஹாராஜா அவர்கள் மனமுவந்து அவர் கல்யாணத்திற்குச் செலவாம் பொருளைக் கொடுத்தபொழுது பாடியகவி.

வெண்பா.

பூமேவு மம்புயத்தார் பொன்னூச லென்றுநித
மாமேவு துங்க மணிமார்பா—பாமேவு
தாவுமா வும்பனிரை சார்பாற் காவுனக்குக்
காவுமா வும்மிணையா கா.

கா—கற்பகம். ஆ—பசு. (காமதேனு)

பாற்கர ஸேதுபதி மஹாராஜா அவர்கள் பேரைவைத்து
மாலை மாற்றாகப் பாடியகவி.

வெண்பா.

பாற்கரசு தாசரா பாவலவ பூவதன
சேற்கரக யாகரா சேவாகற்—பேற்கவா
சேரா கயாகரகற் சேனதவ பூவலவ
பாராக தாசுரகற் பா.

ஓர்சமயம் ஸேதுபதி மஹாராஜா அவர்கள் சித்ர சமஸ்தி பாடக்கூடுமோவென்று கேட்க பாடமுடியுமென்று சொல்ல மஹாராஜா அவர்கள் சந்தோஷங்கொண்டு மனத்தில் வெள்ளி பொன் ஆகிய இருவகை உலோகத்தால் தனித்தனியே செய்த சிங்க வுருவை நினைத்துக்கொண்டு பாடுகவென்று சொல்லப் பாடியகவி.



வெண்பா.

திண்ணியதோட் பாற்கரனுஞ் சேது பதிவேந்தே
நுண்ணியசிங் கங்களையா நோக்குங்கால்—கண்ணியஞ்சேர்
சீலமகா மேருவதுஞ் செஞ்சடையோன் வீற்றிருக்குங்
கோலக் கயிலையுமொக் கும்.

பாற்கர ஸேதுபதி மஹாராஜா அவர்கள் திருச்செந்தூர்ச் சண்முக
விலாசங் கட்டுவதற்குப் பொருளுதவி செய்தபோது பாடியகவி.

வெண்பா.

முல்லைவடி வேற்சண் முகவிலா சப்பணிக்குச்
செல்லும் பொருளுதவி செய்வோர்கண்—மல்லலுறு
நாவலந்தீ வுக்குமற்ற நாட்டினுக்கும் விண்ணினுக்குங்
காவலராய் வீற்றிருப்பார் கள்.

மற்றோர்சமயம் பாற்கர ஸேதுபதி மஹாராஜா அவர்கள் "கிராமபோனை" வைத்துக்கேட்டு ஆனந்தமடைந்துகொண்டிருந்த பொழுது இதைச் செய்தவர் யாவரென்று கேட்க, மஹாராஜா அவர்கள் இதை அமெரிக்கா தேசத்தில் நியூயார்க் கென்னுமூரில் எடிசன் என்பவன் செய்தானென்று சொல்ல உடனே பாடியகவி.

அமெரிக்கா வின்னியூ யார்க்கெடிச னும்பூ
மிமேலாச்செய் போனக் கிராப்பை—நமெலோர்சொன்
விஞ்சுநால் வேதன் விதிக்கறியா னப்பூமா
னஞ்சுவே தக்கா னும்.

ஓர்சமயம் இராமநாதபுரம் ஜில்லா சிவகங்கைச்சமீனைச் சார்ந்த,பல்வள
மோங்கிய கானாடுகாத்தானென்னு மூர்க்குப் போயிருந்தகாலத்
தில் அவ்வூரிலுள்ள சவுந்தரநாயகி அம்மன் கோயிலில்
தெரிசனஞ் செய்யுமமயத்தில் வணிகோத்தமரொரு
வர் சிதம்பர விநாயகர்பேரிலும் அம்மன் பேரி
லும் செய்யுள் பாடவேண்டுமெனக் கேட்
டுக்கொண்ட பொழுது பாடியகவிகள்.

விநாயகர் விருத்தம்.

காரானை முகத்தானைக் கயமுகனை வதைத்தானைக் கனிவி லார்பால்
வாரானையன்பரிடம்வருவானைத்தனைநிதமும்வணங்கார்க்கொன்றுந்
தாரானைப் புயத்தறுகந் தாரானை யுலகமெலாந் தழைக்க முந்துஞ்
சீரானைச் சிதம்பரவி நாயகனை யெப்போதுஞ் சிந்திப் போமே.

### விருத்தம்.

படையானை நமையினிமேற் படையானைப் பத்தர்நிதம் பரவு திங்கட்
சடையானை வரங்கொடுக்கச் சடையானைத் தாமரைமேற் றங்கு மன்ன
நடையானைத் துட்டரக மடையானைச் சிவலோக நாட்டு வில்வத்
தொடையானைக்காணுடுகாத்தான்வாழ்சவுந்தரியைத்துதித்துவாழ்வாம்

யாழ்ப்பாணம் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள்' மதுரைக்கு வந்திருந்தகாலத்தில் சில புத்தகங்கள் வேண்டுமென்று அவர்களிடம் போய்க் கேட்க அந்நாவலர் அடைச்சொல்லில்லாமற் புத்தகங்களின் பெயரைவைத்து வெண்பாவிற்பாடினாற் றருகின்றேனென்றுசொல்ல உடனேபாடியகவி.

### வெண்பா.

பாரதநன் னூனிகண்டு பாக வதநீதி
சாரந்தில் லைக்கோவை தண்டியலங்—காரம்
பெரிய புராணம் பிரபுலிங்க லீலை
திருவிளையா டல்லகரா தி.

மற்றோராமயம் பாற்கரஸேதுபதி மஹாராஜாஅவர்கள் மன்மதனுக்குந் தலையணைக்குஞ் சிலேடைபாடுமெனப் பாடியகவி.

### வெண்பா.

அம்பஞ் சடைவதினா லானதையன் மேவுகையால்
வம்புவில்லை யாருறுயர் வண்மையின்றற்—கும்பமுனி
யன்னபிர சங்க மார்பாற் கரமாரா
னன்ன தலையணையா மால்.

ஷையாரே கடலுக்கும் நாய்க்குஞ் சிலேடைபாடுமெனப் பாடியகவி.

### வெண்பா.

காதலைவா ரும்பின் கடிக்கப் பலைக்காட்டு
மாதரவா கக்கழிகம் பாருமே—பூதலத்திற்
பண்ணு வலர்புகழும் பாற்கரவே டன்னாட்டிற்
கன்னுயை யொக்குங் கடல்.

மற்றோரமயம் ஸேதுபதிமஹாராஜாஅவர்கள் விக்குள், திருவில், விரை யென்று முறிப்புச் சமஸ்தி கொடுத்தபோது பாடியகவி.

### வெண்பா.

வண்டறிபு மண்டுகம் வாய்ந்தறியா வென்னருமை
கண்டறிவை நீர்மற்றோர் கள்ளறியார்—தொண்டர்புக
ழிக்கனைய பாணி யிசைந்தே விளங்கிடுவா
விக்கு டிருவின் விரை.

(கருத்து) தடாகத்திலுள்ள இலக்ஷ்மிக் கிருப்பிடமான தாமரைப் பூவின் வாசனையை வண்டு அறியுமேயல்லாது தவளைக்குத் தெரியா தென்பது.

(தொடரும்)

வேம்பத்தூர்ப் பாஸ்கரன்.

# வாய்மை.

வாய்மை என்பது பொதுவாக வாயிலிருந்து உண்டாகும் சொற்களுக்கும், சிறப்பாக மெய்ம்மைக்கும் பெயராம். ஆசிரியர் பரிமேலழகர் "தீங்குபயவாத நிகழ்ந்தது கூறலும், நன்மை பயக்கும் நிகழாதது கூறலும் மெய்ம்மை" என்று வாய்மைக்கு இலக்கணம் கூறியுள்ளாராயினும் முன் தன் வாயால் இங்ஙனம் செய்வேன் என்று கூறியதைப் பின்னர் அவ்வாறே செய்து நிறைவேற்றுவதும் வாய்மையாம். அங்ஙனமின்றி முன் சொல்லியதைப் பின் செய்ய அஞ்சிப் பின்வாங்குவது வாய்மையாகாமல் பொய்மையாம் என்று கருத வேண்டும்.

முன் தான் செய்வதாகச் சொல்லியதைப் பின்னர் நிறைவேற்றாமலிருத்தல் பெருங்குற்றமாம், இதனையே,

"இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்
வசையன்று வையத் தியற்கை—நசையழுங்க
நின்றோடிப் பொய்த்தல் நிரைதொடீஇச் செய்ந்நன்றி
கொன்றாரில் குற்ற முடைத்து."

என்று நாலடியாரில் கூறியதை யறியலாம். இதனை விளக்கும் கதை கீழே கொடுக்கப்பட்டுள்ளது. அதனைக் காண்க.

## (அரிச்சந்திரன்)

இவ்வுலகத்து மிக்க புகழ்பெற்ற சக்கரவர்த்திகள் தோன்றி அரசாண்ட சூரியகுலத்தில் திரிசங்கு என்னும் மன்னனுக்குப் புதல்வனாய்த் தோன்றினவன் அரிச்சந்திரன் என்னும் அரசன்.

அவ்வரிச்சந்திரன் செங்கோல் தவறாது உலகம் ஆண்டனன். அவன் அரசாட்சியிலுள்ள குடிகள் யாவரும் மிக்க மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்தனர். அவ்வரசன் கன்னோசிநாட்டு மன்னன் சந்திரதயன் என்பவனுடைய அருமை மகளான சந்திரமதி என்பவளை மணஞ்செய்துகொண்டான்.

அவன் அவளோடு இல்லறம் நடத்திவரும் நாட்களில் இல்லறத்தின் பயன் என்று கூறக்கூடிய புத்திரப்பேறு தங்களுக்கு உண்டாகாமையால் அரிச்சந்திரன் மிகவும் மனக்கவலையுற்றான். தெய்வங்களையும் பெரியோர்களையும் சென்று வழிபட்டான். நன்மகன் தோன்றுவதற்கு அவன் நாடாத வழியில்லை.

இங்ஙனம் அரிச்சந்திரன் செய்துவரும் காலத்தில் அவனிடத்துத் தேவ இருடியாகிய நாரதர் வந்து சேர்ந்தார். அவரிடத்தில் அரசன் தன் குறையினை வெளியிட்டான். அவர் அவனுக்கு மகன் பிறப்பதற்குரிய வழியைத் தம் அறிவாலாராய்ந்து "அரசனே! நீ வருணனை வழிபட்டு ஏத்துவையேயாயின் உனக்கு நன்மகன் தோன்றுவான்" என்றுகூறி அவனை வாழ்த்திவிட்டுத் தம்மிடம் சென்றார்.

நாரதர் சென்றபிறகு அரிச்சந்திரன் அவர் கூறியவண்ணமே வேதங்களிற் கூறிய மந்திரங்களால், வருணனைத் துதித்துத் தவம் செய்தான். வருணன் அவன் செய்த தவத்திற்கு மனமகிழ்ந்து அவனெதிரில் தோன்றி ''மன்னனே! நீ உனக்கு மைந்தன் பிறக்க வேண்டும் என்று கருதித் தவம் செய்கின்றனை. நான் உனக்கு மைந்தனை அளிக்கின்றேன்; ஆனால் நீ அம்மைந்தனை யாகப்பசுவாகக் கொண்டு ஒரு நரமேத யாகம் செய்வதாக ஒப்புக்கொண்டால் நான் நீ கருதிய வண்ணம் செய்வேன். இது உனக்கு உடன்பாடாயின் கூறுக" என்று வினவினான்.

உலகத்தில் மனிதர்கள், தங்களுக்கு மற்றவரால் ஒருகாரியம் நிறைவேற வேண்டியிருந்தால் அவரிடம் சென்று,''நான் வானத்தை வில்லாக வளைப்பேன். ஆற்றுமணலைக் கயிறாகத்திரிப்பேன். உன்னுடைய வீட்டின் கூரையைப்பொன்னாவேய்ந்து விடுவேன். இக்காரியத்தை மாத்திரம் எனக்கு முடித்துக்கொடுத்தால் நான் உனக்கு என்ன செய்வேன் என்பது பின்னால்விளங்கும்'' என்று கூறுவார்கள். அவர்களால் தங்கள் காரியத்தையும் நிறைவேற்றிக்கொள்வார்கள். பின்னர்க் காரியத்தை நிறைவேற்றிக்கொடுத்தவர், இவரைக்காண வந்தால், இவர் அவரைக்குறுகிய நோக்கமுடன் பார்த்து அவர்



தம்வீட்டிற்கு வந்தது தமக்கு விருப்பமில்லாத காரியம் என்பதைக் குறிப்பாக வெளிப்படுத்துவார்கள். முன் அவரிடம் தாம் செய்வதாகக் கூறிய காரியங்களை நினைவு மூட்டினாலும் மறந்தவர்களாகவே இருப்பார்கள். சிலர், தங்களுக்குக் காய்ச்சலோ, தலைவலியோ, வயிற்றுவலியோ, அல்லது வேறு எவ்விதமான நோயோ வந்தபொழுதும்,அன்றித்தம்மிடத்துள்ள பொருள்களில் ஏதாவது ஒன்று காணாமற் போனபொழுதும், தாங்கள், கோயிலிலுள்ள சாமிகளுக்கெல்லாம், பலவிதமாக நேர்ந்துகொள்வார்கள்; அந்நோய் நீங்கின பின்னராவது, இழந்தபொருளைத் திரும்ப எய்தப்பெற்ற பிறகாவது தாம் தெய்வங்களுக்கு நேர்ந்துகொண்டவற்றையெல்லாம் மறந்துவிடுவது மாநிலத்தோ ரியற்கையாம்.

அரிச்சந்திரனையும் அவ்வுலக இயற்கை விட்டிலது. அவன் வருணன் கூறிய வண்ணமே, தனக்கு நன்மகன் தோன்றுவானாயின் நரமேதம் என்னும் யாகத்தைச் செய்வதாக உடன்பட்டான். வருணன் அவனுக்குக் கூடிய விரைவில் நன்மகன் ஒருவன் பிறப்பான் என்று அருள் செய்து மறைந்தனன்.

சிறிது நாளைக்கெல்லாம் வருணன் அருளியவாறே, அரிச்சந்திரன் மனைவி சந்திரமதி வயிறு வாய்த்தனள். பத்து மாதங்களும் நிறைந்த பின்னர் நன்முகூர்த்தம் ஒன்றில் சந்திரமதி ஓராண் குழந்தையை ஈன்றனள். அரிச்சந்திரன் தனக்கு ஆண்குழந்தை பிறந்தது என்றுகேட்டவுடன் நீராடி விதை தானம்செய்து அக்குழந்தையைக் கண்டு மகிழ்கொண்டனன். அதற்கு ஜாதகர்மம்செய்தான். பிறகு ரோஹிதன் என்று பெரியோர்களால் நாமகரணமும் செய்தனன்.

அரிச்சந்திரன் தனக்கு மகன் பிறந்த மகிழ்ச்சியால் அம்மகனைக் கொடுத்த வருணனை மறந்தனன். இனி, அவன் வாமாட்டான்; குழந்தைக்கும் தனக்கும் யாதொருதீங்கும் நேரிடாது என்று நினைத்தனன். அங்ஙனம் அவன் நினைத்துக்கொண்டிருக்கும் பொழுதே, அவன் எதிரில் வரமருளிய வருணன் வந்து தோன்றினன். அரிச்சந்திரன் அவனைக்கண்டான். அவன்குடல் பதறிற்று; வயிற்றைக் கலக்கத்தொடங்கிற்று. மார்பு படபடவென்று துடித்தது; முகம் கருகிற்று; அச்சத்தால் தலை கவிழ்ந்தான்.

அப்பொழுது வருணன் அவனை நோக்கி "நீ முன் கூறியவண்ணமே உன்னுடைய மகனைப் பசுவாகக்கொண்டு நரமேதம் செய்து என்னை மகிழ்விப்பாய்" என்று கூறினன். அரிச்சந்திரன் அதனைக் கேட்டுச் சிறிதுபொழுது கூறுவதற்கு ஒன்றும் தோன்றாமலிருந்து தன்னை ஒருவாறு தேற்றிக்கொண்டு கவிழ்ந்த தலை நிமிர்ந்து வருணனை நோக்கித் 'தேவனே! நான் கூறியவண்ணம் செய்யச் சித்தமாயுள்ளேன்; ஆயினும் இக்குழந்தைக்கு இன்னும் பல் முளைக்கவில்லை. பல் முளைக்காதது அவ்வளவு தூய்மையுடையதன்று. அன்றியும் அது நகைப்பதைக்கண்டு நான் மகிழ்ச்சியடைய வேண்டாமா? நீ இப்பொழுது சென்று சிலநாட் பொறுத்து வருவாயேயாயின் இவனை யாகப்பசுவாக உனக்குக் கொடுப்பேன்" என்று வருணனுக்கு இரக்கமுண்டாகுமாறு கெஞ்சிக்கேட்டனன். அவன் கூறியவற்றிற்கு உடன்பட்டு வருணனும் சென்றனன்.

பின்னர்ச் சில மாதங்கள் சென்று ரோஹிதனுக்குப் பல் முளைத்தது. அரசனுக்கு மனத்தில் திகில் தோன்றிற்று. ஐயோ! வருணன் வந்துவிடுவானே; அவனுக்கு யாது கூறுவது; நமது அருமந்த குழந்தையை நாம் எப்படி அவனுக்குப் பலிகொடுப்பது. இதைப் பார்க்கிலும் நமக்குக் குழந்தை உண்டாகாமலே இருந்தால் கவலையின்றியிருக்கலாமே. அப்பொழுது நமக்குக் குழந்தை வேண்டும்போல் தோன்றிற்றே! ஆம். ஆம்.

"பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனு முடையரோ—இன்னடிசில்
புக்களையும் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லாத வர்."

"கைதவந்தா னீக்கிக் கருத்திற் கறையகற்றிச்
செய்தவந்தா னெத்தனையுஞ் செய்தாலும்—மைதீர்
மகப்பெறு மானுடர்கள் வானவர்தம் மூர்க்குப்
புகப்பெறார் மாதராய் போந்து."

என்று கூறப்படவில்லையா? உலகத்துள் மக்கட்செல்வமே மாண்புடைய செல்வமாம், அதுவும் எனக்கு நீடித்தநாள் இல்லாமலிருந்து இப்பொழுது தோன்றியுள்ளது. அதனை இழக்கவேண்டுமென்றால் என்னால் முடியாது; ஆதலின் அவ்வருணன் வருவானேயாயின் முன்போல் ஏதாவதுரைத்துக் கடத்திவிடவேண்டும் என்று கருதியிருந்தனன்.



வருணனும் முன்போல வந்தனன். அரிச்சந்திரன் அச்சங்கொண்டனன். வருணன் தனக்கு நரபலி கேட்டனன். அப்பொழுது அரிச்சந்திரன் அவனை வணங்கி "வருணனே! இக்குழந்தைக்குப் பல் விழுந்து இன்னும் வரிசைப்பட முளைக்கவில்லை. நன்றாக முளைத்தபிறகு நீ இவனைப் பலிகொள்ளலாம். இப்பொழுது நான் மிகவும் உன்னை வேண்டிக்கொள்கிறேன். பொறுத்தருள் புரிய வேண்டுகிறேன்" என்று கூறினன். வருணன் அப்பொழுதும் அவன் கருத்துப்படியே அவனை விட்டேகினன்.

இங்ஙனமே வருணன் வரும்பொழுதெல்லாம் அவனுக்கு அரிச்சந்திரன் போக்குச்சொல்லிச் செல்லவிடுத்துக்கொண்டிருந்தான். ரோஹிதனும் தக்க பருவத்தையடைந்து கலைகள் கற்றுத்தேர்ந்து அறிவுபெற்று விளங்கினன். இறுதியில் அரிச்சந்திரன் வருணனிடத்திலிருந்து தன் மகனைத் தப்புவிக்க வேண்டுமென்று கருதினன். ஒருநாள் அவன் தன் புதல்வனை யழைத்துக் "குழந்தாய்! நீ பிறக்கும் முன் நான் வருணனைவேண்டி வழிபட்டேன். அவன் 'உனக்குப் பிறக்கும் மகனை எனக்குப் பலிகொடுத்தால் உனக்கு மகனுண்டாக வரம் அருளுவேன்' என்றான். நானும் அப்பொழுதுள்ள ஆத்திரத்தினால் அவன் கூறியதற்குடன்பட்டேன். நீயும் பிறந்தாய். பிறந்தது முதல் வருணனும் அடிக்கடிவந்து உன்னைப்பலிகொடுக்குமாறு கேட்கின்றனன். நானும் அவனுக்குப் பலவாறு போக்குக் கூறிக்கொண்டு வருகின்றேன். யாவரே தாம் பெற்ற புதல்வனை இழக்கத்துணிவார்? நான் உனக்கு இதனைக் கூறினேன். நீ வருணனிடத்திருந்து தப்புவதற்குரிய வழியினை நாடிக்கொள்வாய் என்று கூறினன்.

தன் தந்தை கூறியதைக்கேட்ட ரோஹிதன், வருணனிடம் இருந்து தான் தப்புவதற்காக, வனத்தை நோக்கிச்சென்றனன். அங்கே முனிவர்களைக்கண்டு தவம் செய்வதற்குரிய வழியைக் கேட்டறிந்து தவமியற்றத்தொடங்கினன். இவன் செய்கை இங்ஙனமாக

வருணன் தான் வழக்கம்போல அரிச்சந்திரனிடம் வந்தனன். அப்பொழுது அரசனுக்கு மனத்துள் அச்சம்தோன்றினும் வெளிக்குஅச்சமற்றவனாகக்காணப்பட்டான். வருணன் அவன் செயலுக்கு மனத்துள் நகைத்துக்கொண்டான். அவன் அரசனை நோக்கிப் பலி எங்கே என்று கேட்டான். அதற்கு அரிச்சந்திரன் "வருணனே! நான் எப்படிப் பலி ஈவது. உன்னால் கொடுக்கப்பட்ட என்மகன் எங்கேயோ போய்விட்டான். அவன் போனவிடம் நானறியேன். நீ எனக்கு மகனையருள்வதற்குமுன் நான் எந்த நிலையிலிருந்தேனோ அதே நிலையில் இப்பொழுதுமுள்ளேன். நான் யாது செய்வேன். என்னை நீ இங்ஙனம் கேட்டு மனம் வருந்தச்செய்வது அடாது. இவ்விஷயத்தில் என்னாற் செயற்பாலது ஒன்றுமின்று" என்று கூறிவிட்டான். அரிச்சந்திரனை அவ்விதம் கூறித்தப்பித்துக்கொள்ள விடுவனோ வருணன். அவன் நீர்க்கடவுளாதலின் அரிச்சந்திரன் வயிற்றில் நீரைக்கொண்டுபோய் நிறைத்துவிட்டான். அரிச்சந்திரனுக்கு வயிறு வீங்கிவிட்டது. மகோதரம் வந்தது. நோய்பொறுக்க மாட்டாமல் வருந்தினான். கதறினான். என்னசெய்தும் நோய் மேலும்மேலும் வளர்ந்துகொண்டேயிருந்தது. இந்த நிலைமைக்கு வரும் என்று அரிச்சந்திரன் நினைக்கவில்லை. பெரியோர்களை, அதிலும் தேவர்களை வஞ்சித்துப் பிழைக்கநினைத்தால் அது எவ்விதம் கூடும்.

காட்டையடைந்த ரோஹிதன் தன்தந்தைக்கு நேர்ந்த தீமையைக் கேட்டுத் தன் தவத்தை யொழித்து, அவனைப்பார்ப்பதற்காகத் தன் நாட்டை நோக்கிவந்தனன். வழியில் இந்திரன் எதிர்ப்பட்டு நீ எங்கே செல்கிறாய் என்று வினவ, அவன் தன் தந்தைக்கு நேர்ந்தவற்றையெல்லாம் விளங்கக்கூறினன். இந்திரன் அதனைக் கேட்டு "ரோஹிதனே! உன் தந்தைக்குநேர்ந்த நீர்ப்பிணியை யொழிப்பதற்கு நீ உலகத்திலுள்ள தீர்த்தங்களுக்குச் சென்று வருணனுக்குரிய வேதமந்திரத்தை ஓதி அவற்றில் நீராடினால் உன் தந்தையின் பிணி நீங்கும் என்று கூறினன். ரோஹிதன் அவ்விதமே தீர்த்தங்கடோறுஞ் சென்று நீராடி இறுதியில் தன் நகரத்தை நோக்கி வரும்பொழுது ஒருகாட்டில் இரிசிகர் என்னும் முனிவரைக் கண்டனன். அவரிடத்தில் அவன் தன் தந்தைக்கு நேர்ந்தநோயை நீக்கு



வதற்கு ஒரு நரமேதம் என்னும் யாகத்தைச் செய்யப்போவதாகவும் அவ்யாகத்திற்கு ஒரு மனிதன் பசுவாக இருக்கவேண்டும் என்றும் அங்ஙனம் பசுவாக இருப்பவனுக்குத் தான் அவன்வேண்டும் பொருளளிப்பதாகவும் கூறினான்.

இரிசிகர் அதனைக்கேட்டுத் தம்மிடம் மூவர் புதல்வர் இருப்பதாகவும் அவருள் ஒருவனை யாகத்திற்கு நரபசுவாகத் தருவதாகவும், அதன்பொருட்டுத் தங்களது வறுமை தீர மிக்க பொருள் அளிக்க வேண்டும் என்றும் கூறினர். அதனைக் கேட்ட இரிசிகர் மனைவி, விசுவாமித்திரன் உடன் பிறந்தவள், கௌசிகை என்பவள் மூவர்புதல்வரில் இறுதியில் பிறந்தவன் தன் அன்புக்குரியவன் ஆனதால் அவனைத் தரமுடியாது என்றனள். இரிசிகர் மூத்தவன் தனக்குவேண்டும் என்றனர். இவற்றைக்கண்ட நடுப்புதல்வன் "எனக்குப் பரிந்து வருவார் ஒருவரும் இல்லை. என்னுடைய பெற்றோர்களோ மிகவும் மிடியால் வருந்துகின்றனர். அம்மிடி என்னால் தான் தீரவேண்டும்; ஒரு குடும்பத்தைக் காப்பதற்கு அக்குடும்பத்திலுள்ள ஒருவனை விட்டுவிடலாம் என்று நீதி நூல் கூறும் வண்ணம் இவர்கள் என்னைத் துறப்பதற்கு எண்ணினர் போலும்" என்று கருதித் தானே ரோஹிதனிடம் நேரிற் சென்று "அரசரே! என்னை யாகப்பசுவாக ஏற்றுக்கொண்டு என் பெற்றோர்களுடைய வறுமையைத் தீர்த்தருளும்" என்று கூறினான். அங்ஙனம் கூறிய அவன் பெயர், சுநச்சேனன் அல்லது தேவராதன் என்பதாம்.

தேவராதன் கூறிய வண்ணமே, ரோஹிதன் அவன் பெற்றோர்களுக்கு மிக்க பொருளும் தானணிந்திருந்த அணிகலன்களும் ஆகியவற்றைக் கொடுத்து அவர்களைத் திருப்தி செய்வித்துத் தேவராதனை அழைத்துக்கொண்டு தன் நகரம் நோக்கி நடந்தான், செல்லும் வழியில் ஓர் சோலையில் அரசன் தங்கி இளைப்பாறினன். அப்பொழுது தேவராதன் அச்சோலையைச் சுற்றிப் பார்க்க அதில் தன் அம்மானாகிய விசுவாமித்திரர் தவம் செய்துகொண்டிருப்பதைக் கண்டு அவர் பாதங்களில் வீழ்ந்து வணங்கினன். அவர் அவனைத் தம்மருகில் அழைத்து, அவன் வந்த காரியம் யாதென்று வினவினர். அவன் அவரை நோக்கி, "சுவாமி! என்னைப் பெற்றவர்கள் ரோஹி

தன் என்னும் அரசனிடம் மிகுதியான பொருள் பெற்றுக்கொண்டு என்னை யாகப் பசுவாக அவனிடம் கொடுத்துவிட்டனர். நான் அவ்வரசனுடன் இவ்விடம் வந்தேன். உம்மைக் கண்டேன். சரணமடைந்தேன். நீர் தாம் என்னைக் காப்பாற்ற வேண்டும். வேறுகதியில்லை" என்று கூறினன்.

விசுவாமித்திரர் அவன் கூறியதைக் கேட்டு அவனிடம் இரக்கம் கொண்டு அவனைக் காப்பாற்றக்கருதித் தம்முடைய புதல்வர்களில் யாராவது ஒருவன் தேவராதனுக்கு மாற்றாக அரசனுடன் யாகப்பசுவாகச் செல்லுமாறு கூறினர். அவர்களில் ஒருவரும் அரசனுடன் செல்லச் சம்மதிக்கவில்லை. அவருக்குச் சினம் மூண்டது. தம் புதல்வரனைவரையும் புலையர்களாகப் போகுமாறு சபித்துவிட்டுத் தம் மருமகனை நோக்கி ஒரு வேதமந்திரத்தை உபதேசித்து உன்னை யாகவேதிகையிலுள்ள யூபஸ்தம்பத்தில் பிணித்திருக்கும்பொழுது இம் மந்திரத்தை ஜபம் செய்தால் தேவர்கள் வந்து உன்னைக் கட்டிலிருந்து விடுவிப்பார்கள். அரசனுடைய யாகத்தையும் நிறைவேற்றுவிப்பார்கள். நீ அஞ்சாதே யரசனுடன் செல்க" என்று கூறி விடுத்தனர்.

தேவராதன் அரசனிருக்குமிடத்தை யடைந்தனன். அரசனிளைப்பாறிய பிறகு தேவராதனுடன் தன் நகரத்தை நோக்கிப் புறப்பட்டான். இரண்டொரு தினங்களில் நகரத்தை வந்தடைந்து, தன் தந்தை மகோதரநோயால் வருந்துவதைக் கண்டு தானும் வருந்தி நரமேதம் என்னும் யாகத்தைச் செய்வதற்குத் தான் ஒரு மனிதனைப் பசுவாகப் பெற்று வந்திருப்பதாகவும் அவ்யாகத்தினை அப்பொழுதே தொடங்கலாம் என்றும் தன் தந்தையிடம் கூறினன்.

அரிச்சந்திரன் தன் மகன் ரோஹிதன் செய்தவற்றிற்கு மகிழ்ந்து அவனை நோக்கி "மைந்தனே! ஓராலமரம் பல பக்கங்களிலும் வீழ்துவிட்டு அடிமரம் புற்றுவைக்கப்பட்டுக் கரையானரித்து ஒன்றுமற்றுப் போனகாலத்து அதன் விழுதுகள் அம்மரம் தளர்ச்சியடைந்து கீழே விழுந்துவிடாமல் தாங்குவதுபோல, நல்ல புதல்வர்கள் தங்களுடைய பெற்றோர்கள் தளர்ந்தபருவத்தில் அவர்களைத் தாங்குவதே தம கடமையாகக் கொள்வார்கள். அவ்விதமே நீயும் நான்



தளர்ச்சியடைந்ததை அறிந்து அதனை நீக்க நினைத்தனை. அதற்கொப்ப இப்பொழுது யாகத்திற்கு வேண்டிய நரபசுவையும் தேடிக் கொணர்ந்தனை. நின்னையொப்பார் யாவர்" என்று கூறி வனத்திலிருந்து விசுவாமித்திரர், வசிட்டர், பிருகு சமதக்கி முதலான முனிவர்களை வரவழைத்து அவர்களைக்கொண்டு நரமேதம் என்னும் யாகத்தைத் தொடங்கினன். யாகம் நடக்கும் இடத்திலுள்ள யூபஸ்தமபத்தில் (யாகபசுகட்டும்தறியில்) தேவராதன் கட்டப்பட்டிருந்தனன். யாகத்திற்குப் பசுவை வதைசெய்து அதன் வபையை எடுத்து ஹோமம் செய்யும் வேளை வந்தது. யாகம் நடத்தும் முனிவர்கள் அதற்குச் சித்தமாயிருந்தனர். அவ்வேளையில் தேவராதன் தனக்குத் தன் அம்மானால் உபதேசிக்கப்பட்ட வேதமந்திரத்தை ஓதி ஜபம் செய்தனன். அம்மந்திரத்திற்குத் தேவர்கள் மகிழ்ச்சியடைந்து யாகம் நடக்குமிடத்திற்கு வந்து அரிச்சந்திரனை விளித்து "அரசனே! நீ செய்யும் யாகத்திற்கு நாங்கள் மகிழ்ந்தனம். இவனை (தேவராதனை)ப் பலிகொடுக்க வேண்டாம். இவனைக் கட்டிலிருந்தும் அவிழ்த்துவிடுக. யாகத்தின் பலன் உனக்குக் கிடைத்துவிட்டது. உன் பிணிநீங்கிற்று" என்று கூறினர். அப்பொழுது வருணன் தனியாக அரிச்சந்திரனை நோக்கி "மன்னவனே! யான் நின் மனமறியவே உன்னுடைய மகனைப் பலிகொடுக்க வேண்டினேன். நீ முதலில் செய்வதாக ஒப்புக்கொண்டு பின்னர் உடன்படவில்லை. அதன் பொருட்டே உன் வயிற்றில் மகோதரத்தை உண்டுபண்ணினேன். இப்பொழுது உன் மகன் செய்த செய்கையால் தேவர்கள் யாவரும் மகிழ்ச்சியடையந்தது போலவே யானும் மகிழ்ச்சியடைந்தேன். இனிமேல் உன்னை நோயணுகாது" என்றுகூறினன்.

யாகம் நரபசு இல்லாமலே நிறைவேறிற்று. தேவர்கள் அரிச்சந்திரனுக்குவரமருளி மறைந்தனர். முனிவர்கள் அரிச்சந்திரனால் உபசரிக்கப்பட்டுத் திருப்தியடைந்தனர். தேவராதன் இன்னும் மிகுதியான பொருள் அரசனிடமிருந்து பெற்றுப் பெற்றோர்களை யடைந்து நடந்தவற்றையெல்லாம் நவின்று நன்றாக வாழ்ந்திருந்தனன். அரிச்சந்திரன் நோய்நீங்கினன். ரோஹிதன் அச்சமொழிந்தனன். இறுதியில் இன்பமே,

பத்திராசிரியர்.

---

# வேண்டுகோள்.

அபிமானிகளே!

பொதுவாகத் தமிழ்நாட்டில் பல பத்திரிகைகள் தோன்றி உடனே மறைந்துவிட்டன என்னும் வதந்தி யாவரும் அறிந்ததே. அவ்வதந்தி உண்டானதற்குக் காரணம் பத்திரிகை அன்று; அதனை நடத்துவோருமல்லர்; பின்னை யாவரெனின், அப்பத்திரிகைக்கு விஷயதானம் செய்வோரும், அதனை அபிமானிப்போருமே காரணராகின்றனர். அபிமானிப்போருளர்ரயின் விஷயதானம் செய்வோர் தாமேயுளராவர் என்பதுதிண்ணம். ஆதலின் ஒருபத்திரிகை தோன்றி மறைந்துவிட்டது என்று கூறுவதைப்பார்க்கிலும் அந்நாட்டில் அபிமானிப்போர் இலர் என்று கூறுவதே சாலப் பொருத்தமுள்ளதாம்.

பத்திரிகைகளால் பல நன்மைகள் உண்டு என்பது பல்லோராலும் கூறப்பட்ட விஷயமாம். அதனை இப்பொழுது இங்கே நாம் கூறவேண்டுவதின்று. அந்நன்மையடையக் கூடியவர்கள் அபிமானிகளே; அவ்வபிமானிகளுட் சிலர் இரண்டுமூன்று மாதங்களின் சஞ்சிகைகளைப் பெற்றுக்கொண்டபிறகு தமக்கு அப்பத்திரிகை வேண்டாமென்று எழுதிவிடுகின்றனர். சிலர் ஆறுமாதங்கட்குப் பிறகும், சிலர் ஒன்பது மாதங்கட்குப் பிறகும், சிலர் ஒருவருஷமானபிறகும் வேண்டாமென்கின்றனர். இவர்கள் தாம் பெற்றுக்கொண்டுள்ள பத்திரிகைகளுக்கு விலையினையாவது கொடுக்கின்றனரோ; அதுவுமில்லை. இவையெல்லாம் பத்திரிகைக்கு நஷ்டமல்லவா? அப்பத்திரிகை மறைந்துபோகாமல் நிற்குமோ? அப்பத்திரிகையை மறைந்துபோகும்படி செய்தவர்கள் மேலே கூறப்பட்டுள்ள அபிமானிகளல்லவோ!

ஆதலின் உண்மையபிமானிகளே! நீங்கள் இத் "தமிழாசு" என்னும் பத்திரிகைக்குரிய சந்தாவைச் (செலுத்தினவர்கள் தவிர மற்றவர்கள்) செலுத்தி ஆதரிப்பதுடன் மற்றும் சந்தாதார்களையும் ஏற்படுத்திக்கொடுத்துப் பத்திரிகை நடத்துவோரை ஊக்கித் தமக்கும் உலகத்திற்கும் நன்மையுண்டாக்க நாடுவீர்களென்று நம்பப்படுகிறது. அடுத்த சஞ்சிகை வி பி யிலனுப்பப்படும்.

பத்திராசிரியர்.

---

# மூன்று கேள்விகள்.

---

எக்காரியத்தை எடுத்துக்கொள்ளினும் தொடங்குவதற்கு அனுகூலமான, (1) காலஅறிவும்,(2)யார்யாருடன் தான் கூடிவேலைசெய்யலாம்,யார்யாருடன் சேரலாகாது என்பதும்(3) எல்லாவற்றைக் காட்டிலும் எடுக்கக்கூடிய காரியங்களில் எது முக்கியமானது என்பதும் நமக்குத் தெரிந்தால் நாம் ஒரு காலத்திலும் அபஜயமடையமாட்டோமென்று ஓர் அரசன் சிந்திக்கலாயினன். இவ்வாறு சிந்தித்து, ஒவ்வொரு காரியத்திற்கும் தகுந்த காலத்தையும், எவர்கள் முக்கிய மனிதர்கள் என்பதையும், எது முக்கியமான காரியம் என்பதையும் தீர்மானமாய்த் தெரிந்து தவறு செய்யாதிருக்கும் வழியைத் தனக்குப் போதிப்பவருக்கு பெரிய சம்மானம் ஒன்று அளிப்பதாகத் தன் நாடு முழுவதும் விளம்பரப்படுத்தினான்.

முதல் கேள்வியைப்பற்றிச் சிலர் பின் வருமாறு கூறினர். ஒவ்வொரு செய்கைக்கும் ஏற்ற காலத்தை அறிந்துகொள்ள ஒருவன் முன்னதாகவே ஒவ்வொரு நாள், மாதம், வருஷத்துக்கும் ஒரு முன் காலதிட்டம் வரைந்துகொண்டு குறிக்கப்பட்டதற்கு அணுப்பிசகாது ஒத்து நடக்கவேண்டும்; அப்பொழுது ஒவ்வொரு செய்கையும் அதனதன் சரியான காலத்தில் செய்து முடிக்கப்படும் என்று அவர்கள் கூறினார்கள். முன்னதாகவே எப்பொழுதும் ஒவ்வொரு காரியத்தையும் செய்வது என்று ஒருவரால் தீர்மானிக்க முடியாது. ஆனால் சிலவகைக் கேளிக்கைகளில் இருக்கப்பெற்று ஒருவன் தன் காலத்தை வீணாக்காமல், நடப்பவற்றின்மேலெல்லாம் கவனத்தைச் செலுத்தி அதனின்று தேவையாயிருப்பதையுணர்ந்து செய்யவேண்டியதே என்று மற்றொரு சிலர் கூறினர். மற்றுஞ்சிலர் நடக்கிறவைகளை எவ்வளவு ஜாக்கிரதையுடன் கவனித்தாலும் எந்தக்காரியம் எந்தச்சமயத்தில் செய்யவேண்டுமென்று ஒரு மனிதனால் தீர்மானம் செய்யப்பட முடியாது. ஆனாலோ அவன் அறிஞர்களின் புத்திமதியைப்பெற்று அந்தப் புத்திமதிப்படி எப்பொழுது காரியஞ்செய்யவேண்டுமென்று தீர்மானிக்கவேண்டும் என்று கூறினர்.

இன்னும் மற்றவர்களோ அறிஞர்களைக் கேட்க நேரமில்லாது ஒரு குறித்தகாரியத்தை ஆரம்பிப்பதற்குத் தான் அதுசரியான நே

மா அல்லவா என்று அதேக்ஷணத்தில் தீர்மானிக்க வேண்டிய சந்தர்ப்பங்கள் இருக்கின்றன என்றும், அதை அறிவதற்கு என்னநடக்கப் போகிறது என்பவற்றைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்றும், இது ஜோதிடர்களுக்குத்தான் தெரியும் ஆகையால் ஒவ்வொரு செய்கைக்கும் சரியான காலத்தை அறிந்துகொள்ள ஒருவன் ஜோதிடர்களைக் கலக்கவேண்டுமென்றும் கூறினர்.

இரண்டாவது கேள்விக்கும் இதேமாதிரி பல விதமான உத்திரங்கள் கிடைத்தன. சிலர், அரசனுக்கு மிக இன்றியமையாதவர்கள் அவனுக்கு உதவிபுரியும் அரசாள்வோர்களென்றனர்; வேறு சிலர், ஜோதிடர்களே அரசனுக்கு இன்றியமையாதவர்களென்றும், மற்றுஞ்சிலர், அரசனுக்கு மிக்க இன்றியமையாதவர்கள் வைத்தியரே என்றும், இன்னுஞ்சிலர், மிக இன்றியமையாதவர்கள் யுத்தவீரர்களே எனவும் புகன்றனர்.

மிக முக்கியமான வேலை என்ன என்ற மூன்றாங் கேள்விக்கோ சிலர், இவ்வுலகத்தில் மிக முக்கியமான தொழில் விஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சிகள் என்றும், வேறு சிலர், இராணுவக்கலையே யெனவும், மற்றுஞ்சிலர், மிக முக்கியமானது ஈஸ்வர ஆராதனை எனவும் கூறினார்கள்.

கிடைத்த உத்திரங்களெல்லாம் பல் வேறு விதமாக இருந்தன. ஆகையினால் அரசன் அவைகளொன்றையாவது ஒப்புக்கொள்ளவில்லை. ஒருவருக்கும் சம்மானமும் அளிக்கவில்லை. தன் கேள்விகளுக்குச் சரியான பதில்களைத் தெரிந்துகொள்ள அவன் ஞானத்தினால் மிக்க பிரக்யாதிபெற்றுள்ள ஓர் துறவியைக்கேட்கத் தீர்மானித்தான்.

அத்துறவி ஓர்காட்டில் வாசஞ்செய்துகொண்டு ஒருபொழுதும் வேறெங்கும் செல்லாது சாதாரண ஜனங்களையே வரவேற்றுவந்தார். ஆகவே அரசன் மிக்க எளிய ஆடைகளால் தன்னை அணிவித்துக்கொண்டு தன் மெய்காப்போனுடன் துறவியின் குடிசையை அணுகு முன்னமே அவன் குதிரையினின்று இறங்கி அவரைப்பார்க்கத் தனியே சென்றான்.

அரசன் போய்ச்சேருந் தருணத்தில் துறவி தன் தோட்டத்தில் குழிகள் வெட்டிக்கொண்டிருந்தார். அவர் அரசன் வருவதைப்



பார்த்து அவனுக்கு வந்தனமளித்து அவனை வரும்படி கூறிவிட்டு உடனே தான் தோண்டும் வேலையை மறுபடியும் தொடங்கினார். துறவியானவர் இளைத்தும், பலவீனராகவும் இருந்தார். அவர் பூமிக்குள் மண்வெட்டியை அமிழ்த்திச் சிறு மண்கட்டிகளைத் திருப்பி விடுங்காலத்துப் பெருமூச்சு விட்டார்.

அரசன் அவரை அணுகி "ஞானமுடைய துறவியே, பின்பு இழந்துவிட்டோமேயென்று பச்சாத்தாபப்படாதபடி ஒருவன் கவனமாயிருந்து நழுவவிடாதகாலம் என்ன? யார்மிக முக்கியமான மனிதர்கள், ஆகையால் ஒருவன் எவர்களுடன் அதிகமாய்க்கூடி எவர்களுடன் குறைவாய்க்கூடி உழைக்கவேண்டும்? எக்கருமங்கள் மிக முக்கியமானவை? ஒருவன் மற்றெல்லாக்காரியங்களிலும் எதை முதலில் செய்து முடிக்கவேண்டும் என்ற இந்த மூன்று கேள்விகளுக்கும் விடையளிக்குமாறு நான் உம்மிடம் கேட்க வந்துள்ளேன் என்றான்.

துறவி அரசன் சொல்வதைக் கவனித்தார். ஆனால் ஒரு பதிலும் சொல்லவில்லை. தன் கையை ஊதிக்கொண்டு மறுபடியும் பூமியில் வெட்ட ஆரம்பித்தார்.

அரசன் "நீர்களைத்திருக்கிறீர். உங்கள் மண்வெட்டியை என்னிடம் கொடுங்கள். உங்களுக்குப் பதிலாகச் சற்று வேலைசெய்கிறேன்." என்றான்.

"உனக்கு நன்றி பாராட்டுகிறேன்" என்று சொல்லிக்கொண்டு தன் (கை) மண்வெட்டியை அரசன் கையில் கொடுத்துவிட்டு உட்கார்ந்தார். அரசன் இரண்டு குழிகள் வெட்டி நிறுத்திக்கொண்டு தன் கேள்விகளைத் திருப்பிக்கேட்டான். துறவி ஒரு விடையும் அளியாது எழுந்து மண்வெட்டிக்காகக் கையை நீட்டியபடி 'இப்பொழுது நீ இளைப்பாறு; நான் தொடங்கட்டும்" என்றார். ஆனால் அரசன் மண்வெட்டியைக்கொடாது வெட்டிக்கொண்டே சென்றான். ஒரு மணி கழிந்தது. இன்னும் ஒன்றும் சென்றது. சூரியன் மரங்களுக்குப்பின்னே இறங்க ஆரம்பித்துவிட்டான். அரசன் நிலத்துக்

குள் மண்வெட்டியைச்செலுத்தி அப்படியே நின்று "ஞானியே! என்கேள்விகளுக்கு ஒருவிடை பெறுவதற்காக நான் உம்மிடம் வந்தேன். அவைகளுக்கு உங்களால் விடையளிக்கமுடியாவிடின் அவ்வாறு சொல்லிவிடுங்கள். நான் வீட்டுக்குப் போய்விடுகிறேன்" என்றுசொன்னான்.

துறவியோ "யாரோ இப்பக்கம் ஓடிவந்துகொண்டிருக்கிறார்கள் அதுயார் என்று பார்ப்போம்" என்றார்.

அரசன் திரும்பிப்பார்த்தான். வாஸ்தவத்தில் காட்டினின்று தாடியுள்ள ஒரு மனிதன் ஓடிவருவதைக்கண்டான். அம்மனிதன் தன்கைகளை வயிற்றின்மேல் வைத்திருந்தான்; அக்கைகளின் கீழிருந்து ரத்தம் ஒழுகியது. அவன் அரசன் அண்டையில் ஓடிவந்து கீழேவிழுந்து கண்கள் உயரநோக்கியபடியே அசையாமலும், மெதுவாய் அரற்றிக்கொண்டும் கிடந்தான். அரசனும் துறவியும் சேர்ந்து அம்மனிதன் ஆடைகளைத்தளர்த்தி ஒருபெருங்காயம் இருப்பதைக் கண்டார்கள். அரசன் தனக்குத் தெரிந்தவரையில் எவ்வளவு கூடுமோ அவ்வளவு நன்றாய் அக்காயத்தைக் கழுவி அதைத் தன் கைக்குட்டையினாலும், துறவியின் துண்டினாலும் கட்டினான். ஆனால் ரத்தம் ஒழுகுவது நிற்கவில்லை. அரசன் உஷ்ண ரத்தம் சொட்டினனைந்திருந்த கட்டுக்களைஎடுத்து மறுபடியும் அக்காயத்தை அலம்பிக்கட்டினான். ரத்தம் ஒழுகுவது நின்றவுடன் குத்துப்பட்ட மனிதன், தன் பிரக்ஞை வந்து தாகசாந்திக்கு நீர் கேட்டான். அரசன் கொஞ்சம் சுத்த ஜலம் கொணர்ந்து அவனுக்குக் கொடுத்தான். இதற்குள் சூரியன் அஸ்தமித்துவிட்டான். எங்கும் குளிர் பரவியது. அரசன் துறவியின் உதவியால் அத்தாடியுள்ள மனிதனைக் குடிசைக்குள் தூக்கிச்சென்று துறவியின் படுக்கையில் கிடத்தினான். அம் மனிதன் படுக்கையில் படுத்துக் கொண்டு கண்ணைமூடித் தூங்க ஆரம்பிப்பதாகத் தோற்றினான்.

அரசனோ நடந்துவந்ததாலும் வேலைசெய்ததாலும் உண்டான களைப்பினால் நிலைப்படியில் உட்கார்ந்தபடி கண்மூட ஆரம்பித்தவன் அக்கோடைச் சிற்றிரவு முழுவதும் அவ்வாறே தூங்கும்படி அயர்



ந்தான். அவன் காலையில் விழித்துக்கொண்ட பொழுது அவனுக்கு வெகுநேரம் வரை தான் எங்கே இருக்கிறான் என்றாவது, படுக்கையில் படுத்துக்கொண்டு ஜொலிக்கின்ற விழிகளுடன் தன்னைவிடாது பார்த்துக்கொண்டிருந்த அந்த நூதனமான தாடியுள்ள மனிதன் யாரென்றாவது புரியவில்லை.

அரசன் விழித்துக்கொண்டு தன்னை உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கிறானென்பதைக் கண்டவுடன் அத்தாடியுள்ள மனிதன் "என் குற்றத்தைப் பொறுத்து மன்னியும்" என்று ஈனசுரத்துடன் கூறினான்.

அரசன் "எனக்கு உன்னைத் தெரியாது. உன்னை மன்னிக்கும்படியான விஷயம் ஒன்றுமே நேரவும் இல்லை" என்றான்.

"நீர் என்னை அறியீர். ஆனால் நான் உம்மை அறிவேன். நீர் என் தமையனைச் சிரச்சேதம் செய்து என் சொத்தையும் பறித்துக்கொண்டதற்காக உம்மைப் பழிக்குப்பழி வாங்கப் பிரதிக்ஞை செய்துகொண்ட உமதுபரமவிரோதியே நான். நீர் தனித்துத் துறவியிடம் வந்திருப்பதாக அறிந்துகொண்டு உம்மைக் கொல்லத் தீர்மானித்தேன். நீர் திரும்பிப் போகும்போது உம்மைத் தாக்க உத்தேசித்திருந்தேன். ஆனால் ஒருநாள் முழுவதுங் கழிந்தும் நீர் திரும்பிவரவில்லை. பின்னர் நீர் இருக்கும் இடத்தை விசாரித்தறிந்துகொள்ள நான் ஒளித்திருந்த இடத்தை நீத்து உம்மெய்காப்போர் வழியைக் குறுக்கிட்டேன். அவர்கள் என்னை ஆளடையாளங் கண்டுகொண்டு காயப்படுத்தினர். நான் அவர்களிடமிருந்து ஓடிவந்தேன். ஆனால் நீர் என் காயத்தைக் கழுவிக்கட்டி சிகிச்சை செய்திராவிடின் நான் அதிக இரத்தஒழுக்கத்தால் இறந்திருப்பேன். நான் உம்மைக்கொல்ல இருந்தேன். ஆனால் நீரோ என் உயிரைக் காப்பாற்றினீர். இப்பொழுதோ நான் உயிருடன் இருப்பின் அதுவும் நீர் இஷ்டப்படின் நான் உம்முடைய மிக்க விசுவாசமுடைய தாசனாக இருந்து உழைப்பதோடு அவ்வாறே என் குழந்தைகளையும் செய்ய உத்திரவிடுவேன். என் குற்றத்தைப் பொறுத்து மன்னியும்" என்றான் அம்மனிதன்.

அரசன் தான் தன் சத்துருவுடன் இவ்வளவு இலகுவாய்ச் சமாதானஞ் செய்துகொள்ளவும் அவனைத் தன் நண்பனாக ஆக்கிக்கொள்ளவும் முடிந்ததைப்பற்றி அளவில்லாச் சந்தோஷமடைந்து அவனை மன்னித்ததுமன்றி அவன் சொத்தைத் திருப்பி அவன் வசம் ஒப்பித்து விடுவதாகவும், தான் தன் சேவகர்களையும் தன் வைத்தியனையும் அவனை அரண்மனைக்குக்கூட்டிவர அனுப்புவதாகவும் வாக்களித்தான்.

அரசன் காயப்பட்டுள்ள மனிதனிடம் விடைபெற்றுக்கொண்டு தாழ்வாரத்துக்கு வந்து துறவியைப் பார்க்கச் சுற்றிநோக்கினான். அவரிடமிருந்து விடைபெற்றுச் செல்லுமுன் தான் கேட்ட கேள்விகளுக்குப் பதிலளிக்குமாறு அவரைக் கடைசியாக ஒருதரம் கேட்க விரும்பினான். துறவியோ முந்திபதினம் வெட்டப்பட்ட குழிகளின் சமீபத்தில் முழங்கால்களின்மேல் தவிழ்ந்தாற்போல் நகர்ந்துகொண்டு அவைகளில் விதையை நட்டுக்கொண்டு இருந்தார்.

அரசன் அவரையணுகி "ஞானியே! கடைசித் தடவையாகக் கெஞ்சிக்கேட்கிறேன், என் கேள்விகளுக்குப் பதில்கூறும்" என்றான்.

துறவி தன் குதிங்கால்களின் மேற்குந்தி உட்கார்ந்து தனக்கு முன்னிற்கும் அரசனைநோக்கியபடியே "ஆனால் அவைகளுக்கு முன்னரேபதிலளிக்கப்பட்டாய்விட்டதே" என்றார். அரசனோ "எப்படிப் பதிலளிக்கப்பட்டது" என்று கேட்டான். "சந்தேகமென்ன தெளிவாயே நேற்று நீ என் பலவினத்திற்காக இரக்கங்கொள்ளாமலும் இக்குழிகளை எனக்காக வெட்டிக்கொண்டிராமலும் தனியே திரும்பிச் சென்றிருந்தால், அக்குண்டன் உன்னைத் தாக்கி யிருப்பான். நீ என்னுடன் தங்கியிராது சென்றாயென்பதற்காக பச்சாத்தாபப் படுவாய். ஆகையால் சரியான நேரம் எது எனின் நீ குழிகளை வெட்டிக்கொண்டே சென்ற நேரந்தான். நான் தான் அச்சமயத்து முக்கியமனிதனாய் இருந்தேன். மிக முக்கியமான காரியமோ எனக்கு நன்மைசெய்வதாய் இருந்தது. பின்னர் அம்மனிதன் ஓடிவந்த காலத்தில் மிக முக்கியமானகாலம் நீ அவனுக்கு சிகிச்சா உதவி புரிந்த சமயமே. ஏனென்றால் நீ அவன் காயங்களை (கழுவி) கட்டி



யிராவிடில் அவன் உன்னுடன் சமாதானஞ் செய்துகொள்ளாமல்
இறந்திருப்பான். ஆகையால் அச்சமயத்து மறுபடியும் மிகமுக்கிய
மான ஆள் அவனாக இருந்தான். நீ அவனுக்குச் செய்ததே மிக
முக்யமான காரியமாய் இருந்தது. இவ்வாறாக "மிக முக்கியமான
காலம் ஒன்றேஒன்றுதான். அதாவது: இந்தக்ஷணந்தான். அது மிக
முக்கியமானது. ஏனெனில் அந்தக் காலத்தில் நாம் நம் ஸ்வாதீனத்
தில் இருக்கிறோம்; மிக முக்கியமான மனிதன் யாரென்றால் ஒரு
(நிகழ்கால) க்ஷணத்திலும் யார்யாருடன் நாம் கலக்கநேரிடுகிறதோ
அவரே; மிக முக்கியமான கருமம் யாதெனின் அவருக்கு நன்மை
செய்வதே.

அ. சுப்ரமண்ய ஐயர்.

---

# அறஞ்செய்தல்.

அறஞ்செய்தலென்பது ஒருவர் உள்ளன்போடு சற்பாத்திரமா
கிய பிறர்க்கு யாசித்தபொருளை உடனே கொடுத்தலேயாம். கொடை
யாளியானவன் தான் கொடுப்பதை முகமலர்ச்சியோடும் மனப்பூர்த்
தியோடும் உபசாரத்தோடும் சற்பாத்திரமாகிய அந்தணர், ஞானிகள்
முதலியோர்கட்கும் கொடுத்தல் வேண்டும். ஏற்போன், தனக்களிக்
கப்பட்டது தினைத்துணையேனும் அதைப் பனைத்துணையாகக்கொண்டு
இட்டவரை எஞ்ஞான்றும் மறவாதிருத்தல்வேண்டும்.

அன்னதானம், கோதானம், பூதானம், வஸ்திரதானம், சொர்ணதானம் முதலிய பல்வகைத்தானத்துள்ளும் அன்னதானமே மிகவும் சிறந்ததாகக் கொள்ளப்படுகின்றது. ஏனெனில் மிகுந்த தானத்துள் ஐந்துகொடுத்தால் 'ஐம்பது கொடுக்கலாகாதோ?' வென்றும் ஐம்பது கொடுத்தால் 'ஆயிரம் கொடுக்கலாகாதோ?' எனவும் ஆசை அதிகரிக்கும். ஆனால் அன்னதானத்திலோ ஒருவன் வயிறார உண்ட பின் அதற்குமேல் அவனுக்கு அதில் விருப்பம் உண்டாவதில்லை. அதுபற்றியே அன்னதானம் மிகவும் சிறந்ததாகக் கொள்ளப்படுகின்றது.

அநேகவித தருமங்கள் நம்மால் செய்ய இயலாவிடினும் உண்ணுங்காலத்து வந்தடுத்தவர்க்கு ஒருபிடி அன்னமாயினும் இடல் வேண்டும். இதனையே திருமூலர்,

“யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு விற்கொரு வாயுறை
யாவர்க்கு மாம்உண் ணும்போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே”

என்று தம் திருமந்திரத்தில் கூறியுள்ளார். சமயங்கடந்துவந்த அதிதிக்கு யாதொன்றும் இட இயலாவிடினும் அவரை உபசரித்து இன்னுரையாடி அவரது களையைமாற்றி அனுப்பல்வேண்டும். தருமதேவதையின் உறைவிடமாகிய நம் பாதகண்டத்தில் முற்காலத்தில் எண்ணிறந்த வள்ளல்கள் ஆவி நீங்கினும் அறத்தைக்கைவிடாது போற்றிவந்திருக்கின்றனரல்லவா?

குமணமகாராஜன் தம் தம்பியினால்நாட்டைவிட்டுக் காட்டிற்குத் துரத்தப்பட்டு துக்கத்தால் அலைந்துகொண்டிருக்குங் காலத்துந் தம்மை வந்தடுத்த சீத்தலைச் சாத்தனாருக்குத் தம் தலையைத்துணித்துக்கொண்டுபோய் தம் தம்பிக்குக்காட்டிப் பரிசில் பெறும்படி கூறினாரல்லவா? ஆகா! அதிதியின் பொருட்டுத் தம் ஆவியையும் பிரியச் சம்மதித்தாரே.

அஃதன்றியும் உத்தமவள்ளலாகிய கர்னன் அர்ஜுனன் இட்ட பாணங்களைத் தாங்காதவனாகி அயர்வடைந் துயிர்விடுந்தறுவாயிலும் அதிதியாகவந்த ஆயர்கோனுக்கு ‘தருமம் தலைகாக்கும்’ என்றபடி அடையலர்பாணம் அணுகாதடைத்துக்கொண்டிருந்த அறதேவியையும் அளித்தானன்றோ? பொற்கிண்ணம் கைமாறுமுன்னர்ச் சற்குண மனமாறிவிடுமோ வெனப்பயந்து விற்பிடிக்கும் கையாலீந்த நற்குண வள்ளலன்றோ கர்னன். இவ்வின்குண வள்ளலுக்கு ஈசனது இணையடி கிடைக்காத காரணம் இவனது அறத்தில் அன்னதானப்பலன் கலவாமையே. அன்னதானம் செய்யப்படுமிடத்தைச் சுட்டிய அவன் சுட்டு விரலுக்குச்சுவர்க்கம் கிடைத்ததெனின் அன்னதானப்பலனை யாரே அறையக்கூடும்?



பஞ்சகாலத்தில் மிகுந்த பாடுபட்டு கடைசியாய்க்கிடைத்த சிறிதுணவை ஒரு அந்தணரும் அவர் மனைவி, மகன், மருகி ஆகிய நால்வரும் உண்ணப் புகுங்காலத்துப் பசியோடுவந்த ஓர் அதிதிக்கு அந்தணர் தம் பங்குணவைக்கொடுக்க அதுபோதாமையால் ஒவ்வொருவரும் அத்தருமத்தைப் பூர்த்திசெய்யக்கருதித் தம்பங்குணவைக் கொடுத்து இறுதியில் பசிப்பிணியால் இறைவன் கழலில் இரண்டறக்கலந்தனரென்றும் அங்குவந்து புரண்ட ஒரு கீரியினது உடல் பாதிஸ்வர்ணமாயிற்றென்றும், அதன் மறு பாதியுடல் தருமர் இயற்றிய யாகத்திலும் ஸ்வர்ணமாகமாறவில்லை என்றும் ஸ்ரீமகா பாரதத்தில் ஓர் கதை சொல்லப்பட்டிருக்கின்றது. தருமால் இயற்றப்பெற்ற யாகத்திலும் ஸ்வர்ணமாகாத உடல் அன்னதானம் செய்தவிடத்து பொன்மயமடைந்ததென்றால் அன்னதானப்பலனை யாரே விளக்கக்கூடும்.

ஐயறிவுபடைத்த இருபுறாக்கள் அதிதியாகிய ஒரு வேடன் பொருட்டு தாம் தீயில் விழுந்து தம் சரீரங்களை வேடன் புசித்து உயிர் பிழைக்குமாறு செய்தனவென்று நாம் வாசித்திருந்தும் ஐயறிவுபடைத்த அப்புறாக்களுக்குத்தோன்றிய தருமசிந்தையும், ஆறறிவு படைத்த மக்கட்பிறவி எடுத்த நமக்குத் தோன்றாதிருப்பது பெரிதும் விந்தையே.

நாம் முதன்முதல் செய்யுள் கற்க ஆரம்பித்தகாலத்தில் முதலில் நமக்குச் சொல்லிக் கொடுக்கப்பட்டன “அறஞ்செய விரும்பு” “ஐயமிட்டுண்” “இயல்வது காவேல்” முதலிய அருமையான வாக்கியங்களல்லவா? இவ்வருமையான மொழிகளை நமக்குபகரித்த நம் ஔவை மூதாட்டியே,

“தானமும் தவமும் தாம்செய்வ ராயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே”

எனவும் கூறியுள்ளார்.

அன்றியும் சிலப்பதிகாரத்தில்,

"ஊனூண் டுறமின் உயிர்க்கொலை நீங்குமின்
தானஞ் செய்மின் தவம்பல தாங்குமின்
செய்நன்றி கொல்லன்மின் நீநட் பிகழ்மின்"

என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. பெருக்காற்றையும், அவ்வாற்றால் இடப்படும் மடுவுமேடும் போன்றது செல்வமாதலால் உளபொழுதே சூழும் எழ்பவம் துடைத்தல் செய்யும் பொருட்டு முன்னோர் உரைத்தமொழி தவறுமல் எந்நாளாயினும் இரப்பர்க்கிடல் வேண்டும். பிற்காலங்களில் அவைகளைச் செய்துகொள்ளலாகாதோ? உடனே செய்யவேண்டிய அவசியமென்னவென்றால் "இன்றைக்கிருந்தாரை நாளைக்கிருப்பரென்றெண்ணவோ திடமில்லையே" என்றாப்போல் உளநாள் வரையாதுஒல்லுவதொழியாதுசெல்லும் இம்மானிடதேகம் நீர்மேற்குமிழிக்குச் சமானமானதாலும் ஊழிகாலம் இந்நிலவுலகின்கண் தங்காது. ஆதலால், அடுத்தோரை ஆதரித்து, இன்சொல்வழங்கி, இச்சித்தவைகளை ஈந்து, ஈசனைத்தொழுது, புண்ணிய பாவங்களால் நடத்தப்பட்டுச்செல்லும் இப்புன்புலால் யாக்கையையொழித்து, அகண்ட பரிபூரண சச்சிதானந்த சிற்சொரூபத்தில் ஐக்கியமாகி, எல்லையிலாப் பெருவாழ்வு வாழ்வதற்கும் குருநாதனது உபய பாதங்களே துணையாம்.

ஓர் மாணவன்.

---

## சம்பகமாலினி.

(317-ம் பக்கத்தொடர்ச்சி)

---

பரி—அப்படியல்ல ஷண்பகம்! உனக்கோ யௌவன வயது காலமோ வசந்தகாலம். ரமணீயமான ஓர் பூஞ்சோலையில் ரம்மியமான சாயங்கால வேளையில் உல்லாசமாக உலாவுகின்றாய். இத்தகைய காரணங்களே உனது மனதில் குதூகலத்தை உண்டாக்குகின்றன.

ஷண்ப—வேண்டுமென்றே எனக்குக் கோபமூட்டுகின்றீர்கள். என்னை ஏளனஞ்செய்யவேண்டாம்.

விமலா—அம்மணி! அவ்வாறு நாங்கள் எண்ணவில்லை.



பரி—ஷண்பகம்! கோபித்துக்கொள்ளாதே. விவாக காலஞ் சமீபித்துவிட்டது. இந்தச் சமயத்தில் ஓர் பூமானும் பூமகளும் அதிஉல்லாசமாக விருக்குங்காலம். அதற்கேற்ப நீயும் ஓர் ஸ்திரீ. யௌவன வயதில் ஒரு வாலிபனைக் கல்யாணஞ்செய்துகொள்வதற்குத் தக்ககாலம்.

(பின்னாலொளிந்துகொண்டு வத்ஸன்)

வத்ஸ—நேக்குங் கல்யாணம்.

(எல்லோரும் திடுக்கிடுகின்றார்கள்)

ஷண்—யார்அது?

வத்ஸ—கல்யாணம்பண்ணிக்கொள்ளுங்காலம் வந்துட்டுது.

வி—அரசி! வத்ஸாபோல் தோன்றுகின்றது.

ஷ—ஆம்; அவனை (இழுத்துவா)

(வத்ஸனை விமலா வெளியேயிட்டு வருகின்றாள்)

வத்ஸா! இதுதான் நீ கற்கும் கல்வியோ? அமிர்தவான் எங்கே, நீ ஏன் இங்குவந்தாய்?

வத்ஸ—அவர் வீசரிடம் போயிருக்காரு.

ஷண்—யாரது?

வத்ஸ—வீரன் வீரன். அன்றைக்குச் சபைக்கு வாலலை

விமலா—ஜெயசிம்மரைப்பற்றிக் கூறுகின்றார்போலும்.

வத்—அவர்தான்

ஷண்ப—எதன்பொருட்டு உன்னை விட்டுவிட்டு அமிர்தவான் அவரிடம் சென்றார்?

வத்—நான் பாடம் படிக்கில்லையாம். அவரைக் கீழே தள்ளிவிட்டேனும். என்னைக்கொல்ல வீரன் கிட்டே போயிருக்காரு. நான் செத்துப்பூட்டேன்! செத்துப்பூட்டேன்!

(வத்ஸன் அழுகின்றான்)

ஷண்—(தனக்குள்) இப்புத்தியீனனை எனது சகோதரனென்றெண்ண எனக்கு மிகுந்த அவமானத்தை உண்டுபண்ணுகின்றதாயினும் என் செய்வது? (வெளிப்படையாக) வத்ஸா! வத்ஸா! அழ வேண்டாம். அவர் உனக்கு யாதொரு தீங்குஞ் செய்யார்.

வத்ஸ—நிச்சயமா? எவக்குப் பாதி உசிரு போயிட்டுது; அவர் வந்தாக்கே நான் செத்தே பூடுவேன்.

(மறுபடியும் அழுகின்றான்.)

ஷண்—நீ வத்ஸனல்லவென்று அவரிடம் கூறிவிடுகிறேன். அப்பொழுது அவர் உன்னையொன்றுஞ்செய்யார்.

வத்—ஆனால் சரி; சரி; அதிருக்கட்டும் கல்லாணம் காலம் வந்தூட்டுது! எனக்குக் கல்லாணம் வேண்டாமா?

பரி—அதற்கு உமக்குத்தக்க பெண் ஒருவளை நீர்தெரிந்தெடுக்க வேண்டாமா?

வத்ஸ—பொன்னு! நான்தான் இராஜாபிள்ளையாச்சே! அப்பாகிட்டே சொன்னு எத்தனையோ பொன் கொடுக்கிறார். அக்கா நீயுங் கொடுப்பாய். கொடுக்கமாட்டே?

ஷண்—என்னடாவேண்டும்?

வத்—பொன்னு! பொன்னு! கல்யாணத்துக்குப் பொன்னு.

ஷண்—என்னடா உளறுகின்றாய்?

பரி—வத்ஸரே கலியாணமாகவேண்டுமானால் நீர் ஒரு பெண்ணைத்தேடி விவாகஞ்செய்துகொள்ள வேண்டுமென்று கூறினேன்' அதற்கு அவளும் உமது இஷ்டத்திற்கு சம்மதிக்க வேண்டும்.

வத்—நீ பொன்னுன்னு? வேண்டுமென்றாய்! அக்கா! அதுக்கு நீ பொன் கொடுக்கிறியா?

பரி—என்ன புத்தி சிலவுக்குப் பொன்வேண்டுமென்கின்றீரா?

ஷண்—அதற்கு என்ன? வேண்டிய பொன் தருகின்றேன்.

வத்—அப்பொன்னு கல்யாணம் முடிஞ்சுபோச்சு.

பரி—எப்படி?



வத்—பொன்கொடுத்துப் பெண் வாங்கிவிடுகிறது.

பரி—அதற்கு எந்தப்பெண் சம்மதித்திருக்கின்றாள்?

வத்—ஆமா என்னமாக் கல்யாணம் பண்ணிக்கிறது.

பரி—முதலில் ஒரு ஸ்திரீயைக் காதலிக்கவேண்டும்.

வத்—என்னது? காது கடிக்கிறதா?—விமலா இங்கே வா!

(விமலா அருகே செல்கின்றாள்)

(அவள் காதைக் கடிக்க முயல அவனை விமலா கீழே தள்ளுகின்றாள்)

இப்படித்தானு? உன் காதைக் கடிக்கட்டுமா?

பரி—இல்லை காதலிக்கின்றது. அதாவது ஒரு பெண் மீது இச்சைப்படுகின்றது.

வத்—இல்லாட்டா?

பரி—விவாகஞ்செய்துகொள்ளமுடியாது?

வத்—இல்லை இல்லை நீ சொன்னபடி கேட்கிறேன். (விமலாவிடம் சென்று) என்னைக் காதலிக்கின்றது. அதாவது இச்சைப்படுகின்றது சரிதானே!

பரி—இல்லை ஐயா! நீர் எந்த ஸ்திரியிடம் காதல் கொண்டீரோ? அவளிடம் சென்று வெகு பிரியத்துடன் பேசி அவள் உம்மை விவாகஞ் செய்துகொள்ளச் சம்மதிக்கப் பிரயத்தனப்படவேண்டும்.

வத்—இவ்வளவுதானு! பரிமளா உன்னோடு பிரியமாகப் பேசுகிறேன். விவாகம் பண்ணிக்கோ? இல்லாவிட்டா வீரன்கிட்ட சொல்லிப்பூடுவேன். அவர் உன்னைக் கொன்னுடுவார். என்ன? சொல்ரே.

பரி — (தனக்கு) ஷண்பகத்திற்குக் கூடப்பிறந்தவனென்று எண்ண எனக்கே மிக்க அவமானமாக விருக்கின்றது.

ஷண்—விமலா! பரிமளா! அவனுடன் என் சல்லியஞ் செய்கின்றீர்கள். விமலா!

வத்—அக்கா! நான்தான் பிரியமாய்ப் பேசினேனே, அவள் ஏன் என்னைக் கல்லாணம் பண்ணிக்க மாட்டேன்னு?

ஷண்—ஆகட்டும். நீ நன்ருய்க் கல்வி கற்றபிறகு உனக்கு விவாகம் செய்விக்கின்றேன். விமலா! வத்ஸனே இட்டுக்கொண்டு சென்று அமிர்தவானிடம் விட்டுவா.

(ஷண்பகமாலினியும் பரிமளாவும் போகின்ருர்கள்.)

விமலா—வத்ஸரே வாரும் போவோம்.

வத்—என்னைக் கல்லாணம் பண்ணிக்கிறேன்னு சொல்லு.

விமலா—உம்மையா? பேஷ்! (தனக்குள்) விளக்குமாத்துக் கட்டைக்குப் பட்டுக்குஞ்சலம் வேண்டுமா. நீரும் ஓர் அரசியின் வயிற்றில் உதித்தீரே. (வெளிப்படையாய்) அதைப்பற்றி இப்பொழுது கவலையுறவேண்டாம். வாரும் போகலாம்.

வத்—என்னைக் கல்லாணம் பண்ணிக்கிறயா!

விமலா—கலியாணமா!

வத்—ஆனல் என்னைக் கல்லாணம் பண்ணிக்கமாட்டே. நானும் உன்னோடே வல்லே. அக்காகிட்டே போய்ச் சொல்றேன் பார்!

(ஓடுகின்ருன்; விமலா அவனைத் துரத்துகின்ருள்.)

(ஷண்பகமாலினியும் பரிமளாவும் உலாவிவருகின்ருர்கள்)

ஷண்—பரிமளா! சல்லியன் சில நாட்களாக ஏதோ ஒருவிதமாக இருப்பதைக் கவனித்தா யல்லவா? அதன்காரணம் என்னவென்று எனக்குத் தெரியவில்லை.

பரி—எனக்கும் அவ்வாறே தோன்றுகின்றது. இது காறும் அரசனிடம் வெகு அன்புபாராட்டி அவர்க்குவேண்டிய உதவிகள் செய்வதில் கருத்துக்கொண்டு நடந்தவர். இப்பொழுது மனதில் ஏதோ கோபங்கொண்டு இருப்பதாகக் காண்கின்றது. உனது பிதாவோ அவன்மீது அதிக பக்ஷம் வைத்திருக்கின்ருர். அவ்வாறிருக்க சிலகாலமாகச் சல்லியர் வேற்றுமையாகக் காணப்படுவதன் காரணம் தெரியவில்லை.

ஷண்—முன்போன்று இப்பொழுது அரண்மனைக்கு அடிக்கடி வருவதில்லை. என் தந்தை சில ராஜ்ஜிய விஷயங்களைப்பற்றி அவனைக் கேட்பினும் தக்கபடி தன்னபிப்பிராயத்தை வெளிவிடாது சென்று விடுகின்ருன்.



பரி—அதனுலென்ன? ஜெயசிம்மர்வந்தபின்னர் மகாராஜாவிற்கு ராஜ்ஜியகவலை யதிகமாகவில்லை. சமயத்துக்குத்தக்க ஆலோசனைகளை அரசனுக்கு எடுத்துக்காட்டி ராஜாங்கம் யாதொரு குற்றம் குறைவின்றி நடைபெற ஜெயசிம்மர் காரணமாக விருக்கின்ருர். அரசனும் சல்லியனின் உதவியை இப்பொழுது அதிகமாகத் தேடுவதில்லை.—ஆம் சண்பகா—ஒருக்கால்—

ஷண்—ஒருக்கால்?

பரி—இவ்வாறு சல்லியன் உதவியை நாடாது ஜெயசிம்மரின் ஆலோசனைகளுக்கடங்கி அரசன் நடந்து வருவதால் தன்னை அலக்ஷியஞ் செய்யப்பட்டதாக தப்பானவெண்ணம் கொண்டு கோபங்கொண்டிருப்பார் என்று தோன்றுகின்றது.

ஷண்—யாது கூறுகின்ருய் பரிமளா? நீ கூறும் காரணங்கள் சரி யென்றெனக்குத் தோன்றவில்லை. சல்லியனை இகழ்ச்சியாக அரசன் எண்ணுவதில்லையே, அப்படியிருக்க ஏன் அவர் அவ்வாறு நினைக்கவேண்டும்?

பரி—சிறு குழந்தை போன்று நீ உரைக்கின்ருய் பொறாமையால் இவ்வுலகத்தில் எவ்வளவுகேடுகள் சம்பவிக்கின்றனவென்பதை நீ மறந்தாயோ?

(தொடரும்)

K. இராமநாதையர்,

வக்கீல், மதுரை.



# பொதுசமாசாரம்.

அமெரிக்கா கான்ஸாஸ் நாட்டில் ஒரு பெண் ஒரே பிரஸவத்தில் ௪-குழந்தைகளைப் பெற்றாள்.

---

தேவஸ்தான பரிபால மசோதாவுக்கு ராஜப்பிரதிநிதி இன்னும் சம்மதியளிக்கவில்லை யென்று தெரிகின்றது.

---

ருஷியாவிலுள்ள ஸோவியத் அரசாங்கத்தை பிரஞ்சு அரசாங்கம் ஒப்புக்கொண்டு விட்டது.

---

இங்கிலாந்திலே லிவர்ப்பூல் என்னுமிடத்தில் ஓர் பெரும் புகையுண்டாகி, ரயில் விபத்துண்டானதின் பேரில் பலர் காயப்பட்டனர்.

---

1928-ல் மீண்டும் பெரியதோர் மகாயுத்தம் ஏற்படுமென்று பேர்பெற்ற வானசாஸ்திரியாகிய ஸ்ரீமான் அபி. மோலெக்ஸ் என்பவர் கூறுகின்றார். த-௨௨-ன்.

---

நெய்யிற் கலப்புச்செய்து விற்போரைத் தண்டனைக்கு ஆளாக்கப் பம்பாயில் ஒரு மசோதாதயாரிக்கப்பெற்று அது நகரபரிபாலன சபையாரால் ஒப்புக்கொள்ளப்பட்டது.

---

பெங்களூரிலொருவன் ரயிலில் பிரயாணம் செய்யும்போது அங்குள்ள ஒரு பெண்ணின் அரையிற் பூட்டியுள்ள ஒட்டியாணத்தைத் திருடிக்கொண்டு வண்டி ஓடும்பொழுது கீழே குதித்துத் தலையிற் படுங்காயமுற்று இறந்தான்.

---

மலையாளத்தில் பாம்புக்கென ஒரு கோயில் கட்டப்பட்டுள்ளதாம். இதன் பூசாரி ஒரு நம்பூரியாம். இக்கோவிலில் உலகத்தில் இல்லாத விஷப்பாம்புகள் அனேக மிருக்கின்றனவாம். ஒருவரையும் இவை தீண்டுவதில்லையாம். இக்கோயிலில் சில சக்கரங்கள்



ஸ்தாபிக்கப்பட்டுள்ளதெனத் தெரிகிறது. எனவே இப் பாம்புகளெல்லாம் இங்கும் அங்கும் சுருண்டுகொண்டே யிருக்கின்றனவாம்.

---

ஜப்பான் தேசத்தில் ஒஸாகா என்னும் நகரில் பிரசுரிக்கப்படும் ஒஸாகாமாஞ்சி என்னும் பத்திரிகைக்கு 10 லட்சம் சந்தாதாரர்களும் அஸாஹி என்னும் பத்திரிகைக்கு 10 லட்சத்திற்கு அதிகமிருப்பதாயும் ஆகாய விமானங்களில் ஏறி விஷய சேகரம் செய்யப்பட்டும், அவைகளில் ஒன்றுக்கொன்று போட்டி போட்டுக்கொண்டும் நடத்தப்படுகிறது. இது வல்லவா தேசமுன்னேற்ற மடைந்திருப்பதற்குக் காரணம். நேயர்களே! நம் நாட்டாரின் பத்திரிகாபிமானத்தை ஒப்பிட்டுப் பாருங்கள். அப்போதேனும் நம்மவர்க்கு உண்மை விளங்குமோ!

---

வெள்ளைக் காக்கை யென்று விளையாட்டாய்ப் பேசுவார்கள். ஆனால் மாயவரத்தில் சில தினங்களுக்கு முன் ஒரு வெள்ளைக் காக்கை அகப்பட்டிருக்கிறது. ஓர் ஆதிதிராவிடர் தமது வீட்டுக் கொல்லையிலுள்ள ஒரு தென்னைமரத்தில் வசித்திருந்த ஒரு வெள்ளைக் காக்கையைப் பிடித்து விற்றுவிட்டாராம். காகம் நல்ல வெள்ளை. காலும் மூக்கும் சிவப்பு. காகா வென்று கூவுகிறதாம். பட்டமங்கலம் தெருவிலுள்ள சத்திரத்தலைவர் ஸ்ரீமான் காசி செட்டியார் அதனை வளர்த்து வருகிறாராம்.

---

திருவையாறு என்னும் சிவக்ஷேத்திரத்தில் தென்னாட்டுச் சங்கீத அவதார மூர்த்தியாகிய ஸ்ரீ தியாகப் பிரம்மத்தின் ஸமாதிக்கட்டடம் கட்ட உத்தேசித்து, கர்ப்பக்கிரஹ மண்டபமும் ஸ்ரீ தியாகப் பிரம்மச் சிலா விக்ரஹங்களும், கணபதி, ஆஞ்சனேய விக்ரஹங்களும், கோபுரமும் கட்டி முடிந்துவிட்டன. 1925௵ ஜனவரி௴ 7௳ மகாகும்பாபிஷேகம் நடைபெறுமென்றும் அதன் செலவு ரூபா 15,000 நிச்சயிக்கப்பட்டிருக்கிறதென்றும் பக்திமான்கள் உதவ வேண்டுமென்றும் அதன் அத்யக்ஷரான ஸ்ரீமதி பெங்களூர் நாகரெத்தினம் அம்மாள் எழுதுகிறார்.

---

லண்டன் பட்டணத்து ஜனத்தொகை பெல்ஜியம் தேசத்து ஜனத்தொகைக்கு சரியாயும் ஆஸ்ட்ரேலியா கண்டத்து ஜனத்தொகையைவிட இருபது லக்ஷம் ஜாஸ்தியாயுமிருக்கிறதாம். அந்த நகரத்தின் தெருக்களின் மொத்த நீளம் இரண்டாயிரத்து இருநூற்று இருபத்து மூன்று மைலாம். இந்தத் தெருக்களுக்கு விளக்குப் போட வருஷத்திற்கு மூன்று லட்சத்து முப்பத்தொன்பதாயிரம் பவுன் செலவாகிறதாம். இத்தெருக்களைப் பாதுகாக்க இருபத்தோராயிரம் போலீஸ்காரர்கள் இருக்கிறார்களாம்.

---

யுத்தத்தில் கண் குருடானவர்கள்:—யுத்தத்தில் கண் குருடானவர்களின் மொத்தத்தொகை 15000 ஜெர்மனி, 3,349 பிரான்ஸ், 3,000 கிரேட் பிரிட்டன், 4,7000 ஆஸ்திரியா 650 பாக்கி ருஷியா. பெல்ஜியம் ஐக்கியநாடு தேசத்தவர்கள்.

---

நமது சக்கரவர்த்தினியின் தேசாபிமானம்:—நமது மாட்சிமை தங்கிய மேரி சக்ரவர்த்தினியாரின் தேசாபிமானம் மிகவும் வியப்புடைத்து. அவர் உடுத்துக்கொள்ளும் துணிகளும், உடுப்புகளும், கையுறைகளும், மேற்சோடுகளும் பிரிட்டிஷ் தேசத்திலேயே செய்யப்பட்டவைகளாம். அவர்கள் மேல் தரித்திருக்கும் உடைகளுக்குள் அணியும் அங்கிகள், அவர்கள் தேசத்திலுள்ள ஏழை ஜனங்களாலும் யுத்தத்தில் கொல்லப்பட்ட உத்தியோகஸ்தர்களின் மனைவிகளாலும் கையால் செய்யப்பட்டவைகளாம். மேலும் அவருடைய பண உதவியால் தற்சமயம் 155,000 தறிகள் தொழில் நடத்தி வருகின்றனவாம். —“லக்ஷ்மி.”—



